சிரவைக் கௌமாரசபை வெளியீடு.

உ
குருவே துணை.

திருப்பேரூர்

# சாந்தலிங்க சுவாமிகள் பிள்ளைத்தமிழ்.

இஃது
சிரவணபுரம் கௌமாரமடாலயம்
ஸ்ரீலஸ்ரீ இராமானந்தசுவாமிகள் மாணுக்கர்
**ஸ்ரீமத் கந்தசாமி சுவாமிகள்**
இயற்றியது.

சின்னவேடன்பட்டி
ஆறுமுகக் கவுண்டர் மனைவி
**ஸ்ரீ கவண்டம்மாள் அவர்கள்**
பொருளுதவிகொண்டு
அச்சிடப்பெற்றது.

 [விலை அணா 8.

பிரமாதி-ஹூ மாசி-மீ.

1940.

சிரவைக் கௌமாரசபை வெளியீடு.

உ

குருவே துணை.

திருப்பேரூர்

# சாந்தலிங்க சுவாமிகள்

# பிள்ளைத்தமிழ்.

இஃது

சிரவணபுரம் கௌமாரமடாலயம்
ஸ்ரீலஸ்ரீ இராமானந்தசுவாமிகள் மாணுக்கர்
**ஸ்ரீமத் கந்தசாமி சுவாமிகள்**
இயற்றியது.

சின்னவேடன்பட்டி
ஆறுமுகக் கவுண்டர் மனைவி
**ஸ்ரீ கவண்டம்மாள் அவர்கள்**
பொருளுதவிகொண்டு
அச்சிடப்பெற்றது.

 [விலை அணு ௫.

பிரமாதி-ஸு மாசி-மீ.

1940.



ஸ்ரீமத் சாந்தலிங்க சுவாமிகள்

ஓம் சிவம்.

திருப்பேரூர்

**ஸ்ரீமத் சாந்தலிங்க சுவாமிகள் மடாலயம்**

சத்வித்யா சன்மார்க்க சங்கத்தில்

**அமைச்சுத் தொழில் நடாத்திய**

கோயமுத்தூர் - விளாங்குறிச்சி

**வி. நா. மருதாசலக் கவுண்டர்**

எழுதிய

# முகவுரை.

---

* "தவளக் கோட்டுப் பவளமால் வரையைப்
புந்தியம் பாற்கடல் நிறுவுதூஉம்
செந்தமி ழமுதந் திரண்டெழற் பொருட்டே."

க. நூற்பெயர்: சாந்தலிங்க சுவாமிகள் பிள்ளைத்தமிழ் என்னும் இந்நூற் பெயரானது நான்காம் வேற்றுமைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய் ஸ்ரீமத் சாந்தலிங்க சுவாமிகளுக்குத் தோத்திர வடிவமாகப் பாடிய பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தம் என விரியும்.

உ. தமிழ்: உலகத்து வழங்கும் மொழிகள் பன்னூறுகும். நமது அரிய பெரிய தாய் நாடாகிய இந்தியாவில்

---

* அரசஞ் சண்முகனார்.

வழங்குவன 225 மொழிகள். உலக மொழிகளுக்குள்ளே தொன்மை,. இலக்கண வரம்புடைமை, பேச்சு வழக்கி லுண்மை, நூற்பெருக்கம் முதலியவற்ருல் சிறந்து விளங்கும் மொழிகள் ஒரு சிலவே. அச்சிலவற்றுள்ளும் தெய்வத் தன்மை, உயர்தனிச் செம்மொழிப்பண்பு, ஓசைச்செட்டு, சொற்கட்டு, பொருட்பொதிவு, பேசவும் பாடவும் சொற் பெருக்காற்றவும் எழுதவும் பாக்கள் யாக்கவும் கற்கவும் இனி மையும் எளிமையும் பொருந்திய திருந்திய சீர்த்தி இவற்ருல் ஒப்புயர்வற்று மிளிர்வது நமது சங்க மங்கலத் தமிழ்மொழி ஒன்றே தான். இதன் தனிப்பெரு மாண்பினை மொழிநூல் (Philology) கூறும்.

௩. பிள்ளைத்தமிழ் இலக்கணம் : இன்னேரன்ன அரு மையும் பெருமையும் தோய்ந்த செந்தமிழின் இலக்கியங்கள் பலதுறைப்பட்டு விரிந்துள்ளன. முன்னேர் வகுத்த பிரபந்த வகை தொண்ணூற்ரறு. அவற்றுள் பிள்ளைத்தமிழ் என் னும் பிரபந்தமும் ஒன்ருகும். இதனை ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனுர் "விருந்து" என்பதன்பாற் படுத்துரைப் பர். இது ஆண்பாற் பிள்ளைத் தமிழ், பெண்பாற் பிள்ளைத் தமிழ் என இருவகைப்படும். ஆண்பாற் பிள்ளைத்தமிழ் இலக்கணம் :

"கடுங்கொலை நீக்கிக் கடவுட் காப்புச்
செங்கீரை தால்சப் பாணி முத்தம்
வாரானை முதலா வகுத்திடு மம்புலி
சிறுபறை சிற்றிற் சிறுதே ரென்னப்
பெறுமுறை யாண்பாற் பிள்ளைப் பாட்டே"

என்பதாம். (இலக்கண விளக்கம் - பாட்டியல்).

௪. இந்நூலமைப்பு: இவ்வாண்பாற் பிள்ளைத்தமிழே நமது சாந்தலிங்க சுவாமிகள் பிள்ளைத்தமிழும். இஃது பாட்டுடைத் தலைவரது இளமைப் பருவத்தைக் காப்புப் பருவ முதல் சிறுதேர்ப் பருவம் ஈறாகப் பத்துப் பருவங்களாகப் பகுத்து வருணித்து வருவது. முதலாவது, இரண்டாந் திங்கட்குரிய காப்புப் பருவம் கழறியும், இரண்டாவது, ஐந்தாந் திங்கட்குரிய செங்கீரைப் பருவம் செப்பியும், மூன்றாவது, எட்டாந் திங்கட்குரிய தாலப்பருவம் சாற்றியும், நான்காவது, ஒன்பதாந் திங்கட்குரிய சப்பாணிப் பருவம் கூறியும், ஐந்தாவது, பதினொன்றாந் திங்கட்குரிய முத்தப் பருவம் மொழிந்தும், ஆறாவது, பனிரண்டாந் திங்கட்குரிய வாரானைப் பருவம் இயம்பியும், ஏழாவது, பதினெட்டாந் திங்கட்குரிய அம்புலிப் பருவம் ஆக்கியும், எட்டாவது, இருபத்து நான்காந் திங்கட்குரிய சிற்றிற்பருவம் திட்டியும், ஒன்பதாவது, முப்பத்தாறாந் திங்கட்குரிய சிறுபறைப் பருவம் வகுத்தும், பத்தாவது, நாற்பத்தெட்டாந் திங்கட்குரிய சிறுதேர்ப் பருவம் பகுத்தும் இவ்வாண்பாற் பிள்ளைத் தமிழ் நூல் பாடியமைக்கப்பெற்றுளதாகும்.

இந்நூல், ஆன்றோர் ஆட்சியின்படி இரட்டையாசிரிய விருத்தங்கள், தாழிசை, சந்தப்பா என்னும் மூவித யாப்புக்கள் கொண்டு, பருவம் ஒன்றுக்குப் பப்பத்துப் பாட்டு விழுக்காடு பத்துப் பருவங்களுக்குமாக மொத்தம் நூறு பாடல்களான் இயன்றுளது. இது திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய சேக்கிழார் பிள்ளைத் தமிழ், அம்பலவாண தேசிகர் பிள்ளைத் தமிழ் போன்று குருதோத்திரமாகச் சமைந்துளது. ஆகவே, அருட்பெரும்புலவராகிய ஸ்ரீமத் சாந்தலிங்க சுவாமிகளுக்கு இப்

பிள்ளைத் தமிழ்ப் பனுவல் மிகவும் ஏற்புடைத்தே. தமிழ்ப் பெருமக்கள் இப்பனுவலுட் பயின்று, ஸ்ரீமத் சாந்தலிங்க சுவாமிகளின் திருவருளுக்குப் பாத்திரராவார்களாக.

ரு. திருப்பேரூர்: திருப்பேரூர் என்பது ஒரு பழைமையான சிவதலம். இது கொங்கு நாட்டிற் சிறந்த கோயமுத்தூர் என்னும் கோவைமா நகருக்கு மேற்கே 3 கல் தொலைவிலுளது. மூர்த்தி தலந் தீர்த்த மகிமைகள் பொருந்தியது. மேலைச்சிதம்பரம் என்னும் கீர்த்தியினது. இதனை, "மேலைச் சிதம்பரமா மிக்கபுகழ்ப் பேரை" எனப் புலவர் புராணம் புகலும். இஃது ஒரு முத்தித்தலமுமாம். இத்தலத்தின் சுவாமி பட்டிலிங்கர்; அம்மன் பச்சைநாயகி; தீர்த்தம் காஞ்சிமா நதி; தல விருட்சங்கள் பிறவாப்புளி, இறவாப்பனை. இத்தல வழிபாட்டினால் தேவர், முனிவர், மக்கள் அடைந்த பயன்கள் எண்ணில, எண்ணிலவே. அவற்றைப் பேரூர்த் தலபுராணத்தில் பரக்கக் கண்டு மகிழ்க.

சு. சாந்தலிங்க சுவாமிகள்: இவர் நமது திருப்பேரூரில் சற்றேறக்குறைய மூந்நாற்றாண்டுக்கு முன் வாழ்ந்த வீரசைவ மாதவப் பெரியார். இத்தலத்தில் கற்பரசியாகிய ஞானாம்பிகை என்னும் தமது மனைவியையும் துறந்து கடுந் தவம் புரிந்தவர். கன்னடதேசத்து வேந்தான குமார தேவர் என்ற பக்குவ மாணவர்க்கு ஞானோபதேசம் செய்தருளியவர். சிவாநுபூதிச் செல்வத்திலே திளைக்கப்பெற்றவர். இவரை, "மும்மதமாப் போலு முழுஞான வீரனம்மா" எனப் புலவர் புராணம் சாந்தலிங்க சுவாமி சருக்கம் பதின்மூன்றாந் திருக் கவிதை புகழும். இவர் பாடியருளிய நூல்கள் நான்கு. அவை சிவகாருணியம் வளர்க்கும் கொலை மறுத்தல்; ஈசுர

பத்தி விளக்கும் வைராக்கிய சதகம்; பாச பந்த நீக்கம் விளக்கும் வைராக்கிய தீபம்; பிரமஞானம் பெருக்கும் அவிரோத உந்தியார் என்பன. இவர் அன்பர் பலப்பலர்க்கும் இந்நூல்களை அறிவுறுத்தி ஞானதானம் வழங்கும் வள்ளலாய்த் திகழ்ந்து, மாசி மகத்திலே காஞ்சிமா நதிக்கு வலப்புறத்தருகிலே மலப்புறத்தருகிலா மெய்ஞ்ஞான சமாதி நிலை கொண்டனர்.

பிற்காலத்தில் சிவநேயச் செல்வர்கள் அக்குறித்த சமாதியின்மீது சிவலிங்கம் அமைத்து ஆலயம் கோலினர்; வீரசைவச் சான்றோர் அதனண்மையில் திருமடம் அமைத்தனர்; அதன்மேற்கருகிலே சத்வித்யா சன்மார்க்க சங்கம் நிறுவினர். அதற்குத் தற்போழ்து 24-ஆம் ஆண்டு நிறைவு விழா நிகழ்கின்றது. இத்திருவிழாக் காலமாகிய பிரமாதி ஆண்டு மாசித் திங்கள் கஉ-தேதி (24—2—40) இத் திருநாளிலே இச்சங்கத்திலே சுவாமிகள் பிள்ளைத் தமிழ் நூல் அரங்கேற்றம் நடைபெறுகின்றது: இது மெத்தப் பொருத்தமே.

எ. இந்நூலாசிரியர்: இவர் நாற்பத்தெட்டாட்டைப் பிராயத்தினர். கொங்கு நாட்டிற் சிறந்த கோயமுத்தூருக்கு வடக்கே 7 கல் தூரத்திலுள்ள (சிரவணம்பட்டி என வழங்கும்) சிரவணபுரம் என்னும் ஊரினர். கொங்கு வேளாளத் திருமேனியினர். பாடசாலைக் கல்வி பயின்றவர். இளமையிலேயே கற்றுணர்ந்தடங்கிய அறவர். திருவாமாத்தூர் கௌமார மடாலய வண்ணச்சரப மகான் ஸ்ரீமத் தண்டபாணி சுவாமிகள் மாணவராய்ப் பிறங்கும் சிரவணபுரம் கௌமார மடாலயத் தலைவராகிய ஸ்ரீமத் இராமானந்த சுவாமிகளால்

த்டுத்தாளப்பெற்றவர். இவரது பிள்ளைத் திருநாமம் கந்தசாமி; தீட்சா நாமம் கந்தசாமி சுவாமி. தமது முப்பதாம் வயதில் பழனிமாமலையில் ஷடி ஞானசாரியரிடம் கௌமார சடாக்கர மந்திரோபதேசமும், சந்நியாசமும் பெற்று, அவரால் அவரது கௌமார குருபீட இளவரசுப்பட்டம் சூட்டப்பேற்றவர். குரு வுபாசன பலத்தால் பற்பல ஒண்டமிழ்த் தோத்திர பிரபந் தங்களைப் பலதெய்வ பரமாகவும், குரு பரமாகவும் பாடிய ஆசிரியர். தமது மடாலயத்தில் சுக்கிரவாரந்தோறும் கூடி நாடியாடிப் பாடித்தொழும் கௌமாரத் திருக்கூட்டத் திற்குத் தெய்வ பத்தி, குரு பத்தி, அடியார் பத்தி, வைராக் கியம், ஞானம் முதலிய நலன்கள் துலங்கப் பிரசங்கமாரி சொரியும் வள்ளலார். துற வொழுக்கத்தில் நிலைத்தொளி ரும் சமரச ஞானநுபூதிச் செல்வத்தினர். சந்த வண்ணமாதிய எந்த வண்ண யாப்பிலும், கற்றுவல்ல புலவரும் திடுக்கிடும் படி, நாற்கவியும் தடையின்றி விரைந்து பாடும் புலமைப் பெருக்கத்தினர். இவர் இயற்றிய வேறு நூல்கள் பக்த மான்மியம் முதலன.

வண்டமிழ்ப் புலமையுடன் வடமொழிப் பயிற்சியும், மலையாள மொழிப் பயிற்சியும் எய்தினர். பற்பல தண் டமிழ் நூல்கள் வகை வகையாகவும், தொகை தொகை யாகவும் யாத்தனர். இத்தகைய புலவர் சுவாமிகள் செந் தமிழ்க் கன்னியைக்கூடி, தலையான மலையாளப் புதல்வி (பக்த மான்மிய வித்தாரப் பேருநூல்) யைப் பெற்றெடுத்து வளர்த்து, கலைஞான வடமொழி மைந்தனை (சங்கராச்சாரிய வைபவம்) யும் ஈன்றெடுத்து வளர்த்து, அவர்களுடன் கொஞ்சிக்குலாவும் குடும்பியும் ஆவர். தமது நூல்தோறும் கொலை, புலை, கள், காமம் முதலிய மறங்களைக் கடிதலின்,

ரூபியும் ஆவர். அன்றியும், இவர் தமது மூச்சிலும் பேச்சிலும், தேட்டிலும் பாட்டிலும், கிடையிலும் நடையிலும், சுருங்கச் சொல்லின், அகவிளக்கத்திலும் புறவிளக்கத்திலும், ஞான சற்குரு மூர்த்தியினது செங்கமலத் துணையே துணையெனக்கொண்ட சுத்த அத்துவித சமரச கௌமாரக் கொள்கையில் காழ்ப்பேறியவராகலின், "நின்று மிருந்துங் கிடந்தும் நடந்தும் நினை, என்றுஞ் சிவன்றாளிணை" என்ற முதியோர் வாக்கியத்திற்கு வாச்சியராய், "செத்தாரைப் போலே திரி" பவரும் ஆவர். இப்பெற்றியினரான இவரை, அறிவறிந்த மூத்தோர் திருவாக்கின்படி, "விழித்த கண் குருடாய்த்திரி வீரர்" எனவும், நடைசமாதியினர் எனவும், இப்போதும் முப்போதும் எப்போதும் சந்தித்து நிந்தித்து வந்தித்து வாழ்வேனாக.

அ. இந்நூலின் உட்பொருள்கள்: இந்நூல், ஸ்ரீமத் சாந்தலிங்க சுவாமிகளின் பத்தி சித்தி முத்திகளையும், புலமை ஞானமோனச் செல்வங்களையும், குருத்துவ பரத்துவப் பண்புகளையும், நூலாசிரியர் ஸ்ரீமத் கந்தசாமி சுவாமிகளது பல நிலைமையான கொள்கைகளையும், கவி நயங்களையும், குருபரத்துவ சுவாநுபூதிகளையும் கொழிக்கின்றது. இந்நாலின் உட்பொருள்களில் இன்றியமையாத சிலவற்றைக் கீழ்வருமாறு எடுத்துக்காட்டுவேனாக:—

(1) நூல் நயங்கள்: இந்நாலில் சொற்கள் செல்லும் செலவும், கருத்துக்கள் அமைந்து கிடக்கும் கிடையும், ஆழ்ந்த கருத்தடங்கிய இயற்கை வருணனைகளும், சிதைவிலாத எதுகைத்தொடைகளும், இயல்பினமைந்த மோனைத் தொடைகளும், இயற்கை அடைமொழிகளும், இணையற்ற

உவமையணிகளும், திரிபணி மடக்கணிகளும், சொல்லின்பம் பொருளின்பங்களும், வேதாந்த சித்தாந்த சமரச சாத்திரக் கருத்துக்களின் தெள்ளிமை ஒள்ளிமைகளும் கல்வித் தவப் புலவரரையும் இன்பக்கடலிலிட்டு ஆட்டுந்தகையினவே.

(2) இந்நூலினுள்ளே இங்குமங்கும் ஆசிரியருடைய தேசாபிமானமும் பாஷாபிமானமும் காணப்படுகின்றன. இவற்றைக் காப்புப்பருவம் பிரமதேவன் துதி ஈற்றடி, செங்கிரைப்பருவம் எட்டாங் கவி, ஈற்றடி; சப்பாணிப்பருவம் 6, 7 கவிகளின் மகுடம்; முத்தப்பருவம் 6, 7 கவிகளின் மகுடம்; பத்தாங்கவி ஈற்றடி; அம்புலிப் பருவம்—சாமம் மூன்றுங்கவி இப்பகுதிகளில் காண்க.

(3) ஆசிரியருடைய குருலிங்கசங்கம பத்தி இந்நூற் பாயிரம் சற்குரு துதியாலும், இந்நூலின் பல கவிதைகளில் வரும் பேரூர்த் தலமூர்த்திகளின் புகழ்ச்சிகளாலும், காப்புப்பருவம் பலதெய்வ தோத்திரங்களாலும், தாலப்பருவம் பத்தாங்கவி ஈற்றடி மகுடம்; அம்புலிப்பருவம் முதற் கவி முதலடி; சிறு தேர்ப்பருவம் எட்டாங்கவி; இவற்றில் வரும் அடியார்ப் பழிச்சுதலினலும் அறியக்கிடக்கின்றது. அன்றியும், இவர் செய்வப் புலவர்பாற் பெரும் பற்றுடைமையைத் தாலப்பருவம் 1, 2, 3, 5 கவிகள்; சிறுபறைப்பருவம் 7, 9 கவிகள்; சிறுதேர்ப்பருவம் பத்தாங் கவி, மூன்றும் அடி இவற்றில் தெரியலாம்.

(4) இந்நூலகத்தில் மற்றும் பற்பல உயர்தரக் கருத்துக்கள் மலிந்துள. அறம்பொருளின்பம் வீடு என்னும் உயிர்க்குறுதிகளைப் பல பகுதிகளில் ஆசிரியர் அழுத்தந் திருத்தமாகக் காட்டுகின்றார். அம்புலிப்பருவம் 5, 7 கவி

களில் சந்திரனுக்கும் பாட்டுடைத் தலைவருக்கும் பேதந் தோன்ற வெகு விநயமாக எடுத்தியம்புகின்றார். அவ்வாற்றால், இல்லற துறவற இன்பாநுபூதி நீதி நெறிகளைத் திறம்படத் தெருட்டுகின்றார். விருந்தோம்பலை முத்தப்பருவம் நான்காம் பாடலில் திருக்குறள் மேற்கோளுடன் விளக்கிக் கவித்தலைவரது திருவருட் செல்வத்தை அழகாக இரந்து நிற்கும் ஆசிரியரது இம்மையன்பு நிலையும், மறுமை யின்புநிலையும், முறையே "உண்டிக்கழகு விருந்தோடுண்டல்"; "வீடு பெற நில்" என்னும் அறிஞர் வாக்குகளை நினைப்பூட்டுகின்றன. முத்தப்பருவம் எட்டாங் கவியில் பொருட்செல்வ அருட் செல்வங்களின் வேறுபாடு தோன்றக்கூறி, அழிவற்ற திருவருட் செல்வ நிட்டாநுபூதி நிலையை மிக விழைந்து நிற்கும் நிலை, இவரது பக்குவ மாண்பினை எடுத்துக்காட்டுவதாகும். அல்லாமல், பொன்னாற்பயனும், மக்களுடம்பாற் பயனும், ஊனுணவு கொள்ளாமல் அன்புநிலை கொண்டு அறம் புரிதலும், தவம் புரிதலும், பேரின்ப நுகர்ந்து திரும்பாத வீடடைதலுந்தான்; என இகபர அறன்வலியுறுத்தலை, வருகைப் பருவம் ஆறாம் பாட்டினில் குறிக்கின்றார். இவ்வாறே, இவர் கொலைபுலை முதலிய கூடா ஒழுக்கங்களைக் கடிந்து, அதமர் உறவு நாணுதலும், உத்தமர் உறவு பேணுதலும் நல்லோர் கடமை; என உத்தம நீதிகளைப் பிடித்தும் வடித்தும் ஊட்டுகின்றார். இவற்றைச் சப்பாணிப் பருவம் ஆறாம் பாட்டு இரண்டாவதடி, ஒன்பதாம் பாட்டு; வருகைப் பருவம் பத்தாம் பாட்டு மூன்றாவதடி; சிற்றிற் பருவம் பத்தாம் பாட்டு: இப்பகுதிகளில் அறிக.

(5) குருபரத்துவ தோத்திர வாஞ்சை, திருப்பணி விழைவு, சகச நிட்டை வேட்கை, சரியை கிரியைப் பற்று

முதலியவற்றை முத்தப்பருவம் 8, 9, 10; இக்கவிகளும்; செங்கீரைப் பருவம் மூன்றுங் கவியும் முறையே தெரிவிக்கின்றன. சாத்திரக் கருத்துக்களும் ஆங்காங்கு துலங்குகின்றன. தத்துவவாதம், யோகாநுபவ நுணுக்கம், சமய சாத்திர சமரச நிச்சயம், உலோகாந்தர கதி; இவற்றைச் சப்பாணிப்பருவம் 1, 2, 3, 4, 5; வருகைப் பருவம் 1, 2, 3; சிற்றிற் பருவம் 3: இக்கவிகளில் உணரலாம். சுத்தாத்துவித சைவ விதிகளுக்கு விலக்கான நூலுங் கோலும், குறியும் நெறியும் இன்னது, இன்னது என்னச் சிற்றிற் பருவம் இரண்டாம் செய்யுள் பன்னிப்பன்னி முழக்கும். வீர சைவ லிங்க தாரணம், வந்தனை வழிபாடு, கொள்கை; இவற்றை அம்புலிப் பருவம் முதற் செய்யுள் முதலடியிலும், சிற்றிற் பருவம் முதற் செய்யுளிலும் பார்க்கலாம். இத்தகைய பகுதிகள் பாட்டுடைத் தலைவரது வீரசைவ மரபினுக்கு மிகப்பெரிதும் ஏற்புடைத்தாவன.

(6) இனிய சந்தச் செறிவுத் தொடைகள் இந்நூலின் ஒவ்வொரு பருவத்தையும் ஒவ்வோர் பகுதியளவில் அலங்கரிக்கின்றன. உதாரணமாக முத்தப் பருவம் 8, 9, 10; செங்கீரைப் பருவம் 8, 9, 10; வருகைப் பருவம் 9; சிறுதேர்ப் பருவம் 10: இச் செய்யுள்களைக் கூறலாம். இத்தகைய பகுதிகளில் பொருளின்பத்தோடு கூடிய சந்தவின்பம் பெருக்கெடுத்தோடுகின்றது.

(7) அம்புலிப் பருவத்தின் செம்பொருள் மாண்பு நெஞ்சை அள்ளியள்ளித் துள்ளிக்குதிக்கின்றது. அதன் சாமப் பகுதி வெறும் பொருள் பற்றிய சிலேடையன்று; மற்று, அது சந்திரனுக்கும் தலைவனுக்கும் அதி துல்லிய

மான சொற்றிரிபுச் சிலேடை தோன்ற யாக்கப்பட்டுள்ள சீர்த்தி, பண்டிதர் ப்பாவலர் நாவலர் பெருமக்களுக்குத் தெவிட்டாத தீந்தமிழமிழ்தமாகும். இந்நூலாசிரிய சுவாமிகள் "புலவர்க் கம்புலி புலி" என்ற புலவர் வாக்கைப் பொய்ப் பித்தனர் என்பது மிகையன்று.

(8) சிற்றிற் பருவத்தைப் பேரறிவுச்சுடர் கொளுத்தும் பெருவீடாகிய சித்திற் பருவமெனலாம். சிறுபறைப் பருவத் தைப் பரநாத முழக்கம் புரியும் அருட் பறைப் பருவ மென லாம். ஏனைய முன்பின் பருவங்களின் சொன்மாட்சி பொருண்மாட்சிகளையும் உய்த்துணர்க.

கூ. ஆசிரியர் இந்நூலின் ஒரு சில கவிதைகளில் முன்னோர் மொழியைப் பொன்னேபோற் போற்றியிருத்தல் பாராட்டத்தக்கது. காப்புப் பருவம் திருமால் துதியில் துறவிற் பெரிய பட்டினத்தடிகள் அருளிய, "நல்லா ரிணக் கமும் நின் பூசை நேசமும் ஞானமுமே" என்று தொடங்கும் திருப்பாடற் கருத்தை நாட்டுகின்றார். செங்கீரைப் பருவம் முதற் செய்யுளில், "எழு பிறப்புந் தியவை தீண்டா, பழி பிறங்காப் பண்புடை மக்கட் பெறின்"; "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச் சான்றோ னெனக்கேட்ட தாய்"; என்ற திருக்குறள் பகுதிகளையும், அப்பருவத்தின் இரண் டாம் செய்யுளில், "தந்தை மகற்காற்று நன்றி யவையத்து, முந்தி யிருப்பச் செயல்"; "மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை, என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்": என்ற திருக்குறள்களின் பகுதிகளையும் இடைச்செருகலாக்கி, அவற்றின் இலக்கணங்களுக்குப் பாட்டு நாயகர் ஸ்ரீமத் சாந்தலிங்க சுவாமிகள் இலக்கியமாக ஒளிர்ந்த வாற்றை

விதந்தோதியது விதந்தோதத் தகுவது. அதுபோலவே, ஆசிரியர் சிற்றிற் பருவம் ஏழாம் பாட்டில், "உடம்பா ரழியி லுயிரா ரழிவர்; திடம்பட மெஞ்ஞானஞ் சேரவு மாட்டார்; உடம்பை வளர்க்கு முபாய மறிந்தே; உடம்பை வளர்த்தே னுயிர்வளர்த் தேனே": என்ற திருமூலர் திருமந்திரத் திருக் கவிப் பகுதியை இடையிலே செருகி, பாட்டுடைத் தலைவரது வழிபாட்டினால், தமது உடம்பையும் உயிரையும் திருநெறி யில் இயங்குவித்துப் பிறவாப் பெருநெறி தலைக்கூடி உய் தலைக் காதலிக்கின்றார். மற்றும் வந்துழிக் கண்டுகொள்க.

கO. நூற்பயன்: இந்நூலின் சொல்லழகுகளும், பொரு ளழகுகளும் விரிப்பிற் பெருகியதோர் காவியமாம்: ஆதலி னால், இது பாலெனத் தேனெனப் பழமென இனிக்கும் சொன்னயமும் பொருணயமும் பொருந்தி, படிப்போர் உள் ளத்தில் ஆண்டானடிமைத் திறத்தைப் பசுமரத்தாணிபோல் பதித்து; குருதோத்திர பரதோத்திர வழிபாடுகளும், மனோ லய சாதன சாத்திய சமரச ஞானநுபவங்களும் பக்குவத்திற் கேற்பப் பயக்கவல்லது; ஆகவே, இதன் "மங்கல சின்மய மதுரத் தமிழ்ச்செம் பாடல்"கள், கற்போர் மனதைக் கனி வித்து குருபரத்துவ சத்திய பத்தி சித்தி முத்திப்பயன்களைக் கூட்ட வல்லன; என நூற்பயன் நுதலி வியப்பேனுக!

வியப்பு வேண்பா.

வேதாந்த சித்தாந்த மீதார் கனிரசமோ
வாதாந்த தத்வ வடிதேனோ—நாதாந்தம்
போந்தபர சாத்திரமோ போதகுரு தோத்திரமோ
சாந்தலிங்கன் பிள்ளைத் தமிழ்.

கக. நூல் வெளியீட்டாளர்: சிரவணபுரம் கௌமார மடாலயத்தின் எல்லைக்கருகிலுள்ள சின்னவேடன்பட்டி ஆறுமுகக்கவுண்டர் மனைவி ஸ்ரீ கவண்டம்மாள் அவர்கள், திருப்பேரூர் ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் மடாலயத்தில் சந்நியாசினியாகிப் பல்லாண்டுகளாகத் தவமாற்றி வருகின்றனர். அவ்வம்மையார் இப்பிள்ளைத் தமிழ் நூலின் அருமைப் பாட்டையறிந்து, தமது சொந்தக் கைப்பொருள் கொண்டு, இந்நூலைப் புத்தகமாக அச்சிட்டு, அன்பர் கூடிப்படித்துக் குதூகலிக்குமாறு உபகரித்த வள்ளன்மையினால், அவ்வம்மணிக்குக் குருசாந்தலிங்கப் பெருந்தகையாரது திருவருட் செல்வம் மேன்மேலும் பெருகுவதாக: என்று ஸ்ரீ முருகக் கடவுள் செந்தாமரைத் திருவடிகளை முன்னி வணங்குகின்றேன்.

மங்களம் பொங்குக!

திருச்சிற்றம்பலம்.

விளாங்குறிச்சி,
12-2-1940.

இங்ஙனம்,
வி. நா. மருதாசலம்.



உ

குருவே துணை.

# சாத்து கவிகள்.

திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம்
ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் மாணாக்கரும் குமாரருமான
**தி. மு. செந்திநாயகம் பிள்ளையவர்களியற்றியன.**

இரட்டையாசிரிய விருத்தம்.

சித்தர்புகழ் கொங்குவள நாட்டினிற் கோவையின்
றிகழ்பச்சி மத்திசையினிற்
றெய்விகக் காஞ்சிநதி யின்றெற்கின் மேலச்
சிதம்பரமெ னும்பேரையிற்
புத்தமுத முணும்விபுதர் நகருறுந் தேனுவொர்
புனிற்றிளங் கன்றினடிதோய்
பொற்சுவடு முடிமிசையு றக்கொள்பட் டீசப்
புராரிகண் ணருளின்வடிவாய்ப்
பத்தர்பல ருஞ்சிவ கருணைமுத லாநான்கு
பண்பும்பெ றத்தருமரும்
பனுவலொரு நான்குசொற் றமர்சாந்த லிங்கர்மிசை
பரவுபிள் ளைத்தமிழ்சொனான்
சுத்தநிட் களசகளம் விரவுகௌ மாரந்
துலங்கிடச் சிரவைமடம்வாழ்
துரியரா மானந்த குரவனடி பேணுந்
தொழிற்கந்த சாமிமுனியே. (க)

## சந்தக்கவி.

தாந்த தந்த தய்யத் தனதந்த தானனா.

வேந்தர் கண்டு வெள்கத் தகுசெஞ்சொல் வீறதால்
மேம்ப டும்பன் மெய்மைத் தகைதுன்று நாவலோர்
சேந்த னன்பர் கொள்ளத் தவவிஞ்சை மேவியே
தீங்க கன்ற வுள்ளத் துறவுங்கொள் வீரனே
மாந்தர் சிந்தை யைதிற் றெளிவொன்ற வேணுநூல்
வாய்ந்தமன்றில் வைகிப் பொழிகொண்டல் பேரைவாழ்
சாந்த லிங்கர் பிள்ளைத் தமிழ்தொண்டர் பேணவே
தான்ப கர்ந்த வள்ளற் குணகந்த சாமியே. (உ)

## வெண்பா.

கொள்ளைத் தமிழ்ப்புலவோர் கொண்டுவப்பச் சாந்தலிங்கர்
பிள்ளைத் தமிழ்ப்புதுநூல் பேசிடினும் — வெள்ளைத்
தமிழ்வாணர் தாமுந் தவவாழ்வு மேவற்
கமிழ்தா வுதவலிது வாம். (ங)

---

திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம்
ஸ்ரீமத் தி. மு. செந்திநயகம் பிள்ளையவர்கள் குமாரர்
## தி. செ. முருகதாச பிள்ளையியற்றியன.

## கட்டளைக்கலித்துறைகள்.

தள்ளைத் தயைகொ ளிராமானந் தக்குரு தாள்பரவுங்
கொள்ளைத் தவமுடை யோன்கந்த சாமிக் குரிசிலென்போன்
வெள்ளைத் தமிழணங் கன்னார் மதிக்கும் விசேடவியற்
பிள்ளைத் தமிழ்பேரைச் சாந்தலிங் கற்கின்று பேசினனே. (க)

பிள்ளைக் கவியொன்று பேசுவ தேபிர யாசையென்பா, ருள்ளைக் கவின்செய் குரவற்கும் பேரைநல் லூர்கொள்பச் சைக், கிள்ளைக்குங் கோசலை சேய்க்குமொவ் வொன்று கெழு வுமன்பாற், சள்ளைப் படாதுரைத் தான்புல வோர்மகிழ் தன்மையனே. (உ)

வெண்பா.

பத்தர்களும் விற்பனஞ்சேர் பாவலவ ரும்பிறவா
முத்தர்களுஞ் சித்தர்களு மோகிக்கும் — புத்தமிழ்தே
நாந்தகங்கை யேந்துகரு நாடமன்ன னும்பணிசீர்ச்
சாந்தலிங்கன் பிள்ளைத் தமிழ். (ங)

---

சிரவணபுரம் கௌமாரசபை அடியவரிலொருவராகிய
கணவாய்ப்பாளையம் வைத்தியம்

## இராமசாமி ஐயா இயற்றியன.

வெண்பாக்கள்.

கன்னலினஞ் சூழ்சிரவைக் கௌமார மன்றத்தே
மன்னுமிரா மானந்த வள்ளலடி — தன்னிதயத்
துன்னிப் பணிந்தேத்து மொப்பில்கந் தான்ந்தன்
பன்னுதமிழ்ப் பாக்களினிப் பால். (க)

திருமகளும் நாமகளுந் தேவருஞ்சூழ் பேரை
மருவிவளர் சாந்தலிங்கன் மாட்சி — பெருகுமன்பார்
பிள்ளைத் தமிழ்த்துதி நூல் பேணிப் புனைந்ததிறங்
கள்ளமிலா நன்மனத்தற் காம். (உ)

---

சிரவணபுரம் கௌமார மடாலயம் ஆலயபூசை

## ஸ்ரீ சின்னசாமி சுவாமிகளியற்றியது.

### எழுசீர் விருத்தம்.

புகழ்மலி கும்ப மாமுனி யமிசாப் பூவினிற் பிறங்குமெங் குருதா, ளகமிசை யமைசீ ரருட்கந்த சாமி யதிநயக் கவிக ளாற் பொலிந்த, மகமிசை சாந்த லிங்கதே சிகன்சீர் வழுத்து பிள் ளைத்தமி ழறிவோர், சுகமலி வீட்டிற் றோய்குவ ரிம்மை சொல்லுமெய்ப் பயனெல்லாந் துய்த்தே.

---

சிரவணபுரம் கௌமார மடாலயம் சபைப்பூசை

## ஸ்ரீ ரங்கழுத்து ஐயா அவர்களியற்றியன.

### எழுசீர் விருத்தம்.

திருமலி பொதியைக் குறுமுனி கலையாய்த் திகழ்ந்தெ னக் குறுபவ மொழித்தா, ளருட்பொலி ராமா னந்ததே சிகன்று ளகத்தமை கந்தசா மிக்கோன், பொருண்மலி சாந்த லிங்கமா முனிக்குப் பொழிந்தபிள் ளைத்தமி ழாய்ந்தோர், மருளுல குறுபொய்ப் பிறவிநீ ரின்ப வான்கதிப் பேறுணர் வாரே. (க)

### அறுசீர் விருத்தம்.

ஆறுமுகம் பொலியாறு முகக்கவுண்டர் பத்தினியா யக்க மோடு, நீறுமுகம் பொலிதொண்டர் பணிசாந்த லிங்கர் பணிநிலைநின் றன்னோர், வீறுமுகந் தமைபிள்ளைத் தமிழச்சிட் டன்பர்கொள விருந்திட் டுண்மைப், பேறுமுகந் தனள் கவண்டம் மாளிசைவான் றிசைகமழ்ந்து பிறங்க மாதோ.(உ)

---

சிரவணபுரம் கௌமார மடாலயம் புட்பப்பணி

## குமாரசாமி ஐயா இயற்றியது.

வெண்பா.

சாந்தலிங்கே சன்றவச்சீர்ச் சாரப்பிள் ளைத்தமிழை
யீந்தன்பர் சிந்தனையு ளின்பநிலை — வாய்ந்தமையத்
தாயி லிசைகந்த சாமியெங்கோ னிற்குலகை
யீயினுநே ராமோ விசை.

---

கோ. தா. செட்டிபாளையம் ரா. நஞ்சப்ப கவுண்டர் குமாரனும்,
நால்வகைத் தோற்றத்தார் நன்மகாநாடு (அல்லது)
கொலைமறுத்தல், கந்தன் சித்திரபந்தன மாலை,
கந்தன் வெண்பா மாலை,
கந்தன் கவிப்பத்து முதலிய நூலாசிரியருமான

## சித்திரகவி திருமிகு. R. N. கல்யாணசுந்தர கவுண்டர்

அவர்கள் இயற்றியன.

வெண்பாக்கள்.

வேதநான் கென்ன விளங்குமெய்ந் நூலாலே
பாதநான் கென்னும் பரிசதனை — யோதி
யுலகி லருளி யுதவுதவ சாந்தலிங்கன்
இலகு பெரும்புகழை யே (க)

பிள்ளைத் தமிழென்னப் பேசினான் காவியத்தின்
கொள்ளை யழகதனைக் கூட்டியே — கள்ளிலகு
சோலைச் சிரவைநகர்த் தோன்றல்கந்த சாமியிரு
காலை வணங்கல் கடன். (உ)

நற்றவரா மானந்த நாதனருள் பாக்கியச்சீர்
பெற்றகந்த சாமிதவப் பேராளன் — கற்றவர்க்குத்
தேனு ரமிழ்தூறிச் சேரும்பிள் ளைத்தமிழை
நானு புகழ்ந்துரைப்ப னன்கு. (ரு)

---

சிரவணபுரம் கௌமாரசபை அடியவரிலொருவராகிய
விளாங்குறிச்சி, பெரியதோட்டம்

## திருவாளர் சுப்பண கவுண்டரவர்கள் இயற்றியது.

ஆசிரிய விருத்தம்.

பூவிரி கடுக்கையர விளமதியொ டாறுசடை
பூண்டுமழு மான்கரத்திற்
பொலிவுபெற விடைமீதி லாரோ கணிக்குமிறை
புதல்வன்மெய்ச் சீடனாகிப்
பொங்குகட லங்கைகொடு நுங்கியுமிழ் சித்திகொள்
புகழ்த்தவக் குறுமுனிவரன்
பொருவில்கலை கொடுவந்து கவுமார நெறிதனைப்
போதமாய்க் கொண்டும்விண்டும்

மேவிரா மானந்த நாமனெங் குருவருள்கொள்
வித்தகச் சித்தமைந்தோன்
விளங்குமறு சமயத்து மிசைதெய்வ மொன்றென
விரித்துரைசெய் சமரசத்தோன்
மெஞ்ஞான நிலைதேர் விளக்கமா ருபதேச
மிகுபக்கு வர்க்கருளியும்
மேன்மைபொலி கந்தசா மித்தவனிவ் வகிலத்தில்
விண்டநா ளளவிலனவாம்

காவிரி பகிரதியை நிகர்காஞ்சி மாநதி
கவின்றிருப் பேரூரினிற்
காட்சிதோ யாலயங் கொண்டொளிப ரப்புசெங்
கதிர்ச்சாந்த லிங்கேசனைக்
கருணைமலி குழவியாய்க் கொண்டுபிள் ளைத்தமிழ்
கழறினு னிந்நூலினைக்
கண்டுகொண் டென்புருகி மிஞ்சுகா தலினேடு
கவினச்சி லிட்டளித்தே

பாவலரு நாவலரு மேவலரு மேபணிசெய்
பண்கொள்கவு மாரர்சிரவைப்
பதிக்கயற் சின்னவே டன்பட்டி வாழ்வெனப்
பதியாறு முகநாமவேள்
பத்தினிமெய் யன்பினிற் சாந்தலிங் கேசன்மெய்ப்
பணிசெய்திரு வேடமிக்காள்
பாரிசைக வண்டம்மை யாமிசைப் பேர்திசை
பரந்திருமை பற்றினளரோ.

---

சிரவணபுரம் கௌமாரசபை அடியவரிலொருவராகிய
கணவாய்ப்பாளையம்

## ரா. சின்னப்ப செட்டியார் இயற்றியது.

வெண்பா.

கொங்கிலுயர் பேரைநகர் கொள்சாந்த லிங்கமுனி
பங்கயத்தாட் சூடுபிள்ளைப் பாவதனு — லெங்குரவ
னுங்கந்த சாமி யலங்கரித்தா னத்திறநா
வோங்குவெள்ளைத் தாயறிவா ளோர்ந்து.

---

கோயமுத்தூர் ஊராண்மைக்கழக உயர்தரப்பள்ளித்
தலைமைத் தமிழாசிரியரும், இந்நூலாசிரியரது மாணவருமான
**வித்துவான், கு. நடேச கவுண்டர், P. O. L., இயற்றியன.**

அறுசீராசிரிய விருத்தங்கள்.

கண்ணுத லளவி லாத கருணைக்கோ ரெடுத்துக் காட்டாய்
விண்ணவர் வியப்பச் செங்கண் வெங்கரா விழுங்குஞ் சேயை
மண்ணவர் மகிழ வெங்கள் வன்றொண்டர் வருவித் தாண்ட
புண்ணியம் பொலிந்த தோங்கும் புகழ்மிகு கொங்கு நாடு. (க)

ஒப்புர வறிவோன் செல்வ முலகெலாம் புரத்தல் போல
எப்புலங் களுஞ்செ ழிக்கத் தான்செழித் திலங்கு நாடு
செப்பமொப் புரவு வாய்மை சேர்ந்தவே ளாளர் மன்னி
மெய்ப்புகழ் விளைப்ப தென்றும் விரிபொழிற் கொங்கு நாடு.

கொங்குநன் னாடு செய்த குறைவறு தவத்தின் பேறாய்
அங்கண னருளி னாற்பே ரூரினி லமர்ந்து ஞானப்
புங்கவர் பரவ நான்கு புனிதநூல் புகன்று வாழ்ந்து
திங்களஞ் சடையான் றாளிற் சேர்ந்தனன் சாந்த லிங்கன். (௩)

அத்தகு பெரிய நூலி னரும்பொரு ளாய்ந்து ஞான
வித்தகம் விளங்கப் பெற்று வியந்துபா ராட்ட லாகப்
புத்தமு தென்னப் பிள்ளைத் தமிழவன் புகழ்வி ளங்க
இத்தல முய்யப் பாடி யீந்தருள் புரிந்தான் மாதோ. (ச)

புன்னெறி யுழன்ற பாவிப் புலையனேன் றிருந்தி மேலாம்
நன்னெறி படரப் பாத நான்மல ரீந்த வள்ளல்
கன்மன முருக்குங் காட்சிக் கந்தசா மிப்பே ரெந்தை
சின்மய ராமா னந்தன் றிருவருட் செல்வச் சேயே. (ரு)

துறவியை மணந்து மேலாந் துரியவ நிதப் பள்ளி
மறவியு நினைவு நீங்கி மலர்ந்தபே ரின்ப மார்ந்து
பெறலருஞ் சாந்த லிங்கப் பிள்ளையைப் பெற்றுப் போற்றும்
உறவென வுலகுக் கீந்தா னவனருட் குவமை யுண்டோ. (கூ)

தரவு கோச்சகக் கலிப்பா.

பவப்பிணிக்கு மருந்துளிருட் பகைக்குவிளக் ககத்துறவோர்
தவத்துணைசெர் தமிழ்க்கிலக்குச் சந்தவண்ணக் கருவூலம்
சிவத்திலெமைப் பிணித்திருத்துஞ் சிரவைநகர்க் கந்தமுனி
தவப்பெரிய னருட்பெருக்கிற் றருமருமைத் தமிழ்க்கவியே.()

---

மருதாசலப் பிள்ளைத்தமிழ், மருதீசர் நவரச வண்ணத்திருப்புகழ்,
ஓதிமலைப் பிரபந்தங்கள், சென்னிமலைப் பிரபந்தங்கள்,
சிவமலைப் பிரபந்தங்கள், சசிகாந்தன்—நாவல்,
வேளாள புராண வசனம்,
இந்திய பத்திரிகைத் தொழிலியல் முதலிய
நூல்களின் ஆசிரியர்
கோயமுத்தூர் – விளாங்குறிச்சி
**வி. நா. மருதாசலக் கவுண்டர் இயற்றியன.**

வெண்பாக்கள்.

முத்தித் தலமா முனைந்ததிருப் பேரூரில்
பத்திநட ராச பதியருளால் — சித்திபற்றிப்
பூவேந்தைப் பாவேந்து போற்றுதவ வேந்தாக்கிக்
காவேந்தன் சாந்தலிங் கன். (க)

சிரவைக் கவுமார தேசிகபீ டங்கொள்
வரதகந்த சாமிபிள்ளை வண்பாச் — சிரமணிந்தான்
மாந்தலிங்க முத்தி மருவுமப்பர் நேர்பேரைச்
சாந்தலிங்க சாமி தனக்கு. (உ)

அன்பை நிலையை யறிவை யருளையும்பே
ரின்பகவி நானலா லீந்ததுற — வன்புலவன்
சாந்தலிங்கன் பிள்ளைத் தமிழமிழ்த முண்டவர்க்கு
மாந்தலிங்கன் னத்தினிப்பெம் மட்டு? (௩)

தண்டபா ணிக்குரவன் சந்ததிரா மானந்தன்
கொண்டகந்த சாமி கொழித்தபிள்ளைத் — தண்டமிழ்முன்
முன்னோரின் சாத்திரங்கள் மூச்சுவிடா; பேச்சுவிடா
என்னோரின் சாத்துகவி யேத்து. (௪)

குருலிங்க சங்கமங்கை கூப்பியுய்வார் காமப்
பெருவெங் கடற்றூண்டிப் பேரின் — புருவமைவார்
சாந்தலிங்கன் பிள்ளைத் தமிழ்ப்பனுவ லோதுமன்பர்க்
காந்தகுந்த மெய்ப்பயனம் மா! (௫)

---

சிரவணபுரம் கௌமாரசபை அடியவரிலொருவராகிய

## பாப்பையா என்கிற மருதாசல ஐயா இயற்றியது.

அறுசீர் விருத்தம்.

எங்கள்பெரும் பாக்கியமாங் கந்தசா மித்திருப்பே ரேந்தல் சாந்த, லிங்கமுனி பரையிடத்தா னருட்பேற்று லாற்று பல லீலை யோடு, துங்கமுள சரியைமுத னிலையுஞ் சேய்த் தமிழிற் றுகளில் சேடன், திங்களன முகக்கலைமின் மெச்சிடவும் பகர்ந்தளித்தார் தினமும் வாழி.

---

சிரவணபுரம் கௌமாரசபை அடியவரிலொருவராகிய

**தம்பி என்கிற மருதாசல ஐயா இயற்றியது.**

அறுசீர் விருத்தம்.

முழுதுணர்ந்த முருகவே ளமிசமென மூதுலக முழுதும் போற்றும், பழுதில்கந்த சாமியண்ணல் சிவசாந்த லிங்கருகுரு பரன்மேற் கூறும், விழுமியபிள் ளைக்கவிநூல் சிவஞானம் புலமைதவ விதிகள் யாவுங், குழுமியபெட் டகமென்பா ரறிவுணர்ந்து குணநலனைக் குறிக்கொள் வாரே.

---





ஸ்ரீமத் கந்தசாமி சுவாமிகள்,
கௌமாரமடாலயம்,
சிரவணபுரம்.

உ

குருவே துணை.

# சாந்தலிங்கசுவாமிகள் பிள்ளைத்தமிழ்.

---

## பாயிரம்.

### விநாயகர் துதி.

அத்திமுக மன்பெற்ற தாகுமெனை யல்லா
 தயற்றேவ ருக்கிசைத்தல்
அத்திமுக மன்னுமெற் கேயுரித் தெனஞான
 மருள்விநோ தத்தகைமைசால்

முத்திறக் கருணைமழை பொழிகின்ற செம்பவள
 முகில்வெற்பெ னப்பண்மறையின்
மூலமியல் பிரணவப் பாலமைபி யற்பொருண்மெய்
 மூர்த்தியடி சேர்த்திமகிழ்வாம்

புத்தியற் சித்தியற் புதஞான வாணியருள்
 பொங்கிப் புவிக்கணமையும்
புலவாக முட்புகுத லிலவாக வாக்குமநு
 பூதிநிலை மீதிலமையச்

சத்தியற் சித்தியன்மெஞ் ஞானவா னந்தவான்
 சகசமக சம்பந்தமாஞ்
சங்கமம் பெறுசாந்த லிங்கர்பிள் ளைத்தண்
 டமிழ்க்கவி தழைத்திலகவே. (க)

## சற்குரு துதி.

கும்பிசைமெ யடிவர்க ணம்பிவழி படுமுனிக்
கோனெனப் பொதியைமுடிசால்
கும்பன்வினை யேனுள்வை கும்பன்பல் குற்றமுங்
குணமெனக் கொண்டருளினற்

றெம்பிசையு மன்பர்நிலை வம்பிசையெ னக்குறச்
சேர்த்தியருண் மூர்த்தியணிசால்
சிரவைப்ப தியினிரா மானந்த நாதனடி
சிரவைப்ப தாப்புனைகுவாம்

வம்பிசைம லர்ப்பொழில்கொள் வண்டிசைக ளெண்டிசையும்
வாரியுண வாரிநுகரு
மாரிநிக ரென்னப் பெருக்கெடுக் குந்தேறன்
மாரிமா ருச்சோணையிற்

கம்பிசையும் வாவியின வாவிப் புகுந்துறுங்
கந்தமிர தங்கலக்குங்
காரணப் பிறவா நெறிச்சாந்த லிங்கன்
கவித்தமிழ்மி கத்தழையவே.

## சாந்தலிங்கசுவாமிகள் துதி.

### கட்டளைக்கலித்துறை.

நன்றுதிக் கும்பருந் தாழ்பிற வாநெறி நற்பதிப்பா
லென்றுதிக் குந்தகை யிற்சான்ற சாந்தலிங் கேசவென்று
மொன்றுதிக் குன்பத மென்றெய்து மன்ப ருளங்களிப்ப
நின்றுதிக் கும்பக நின்றுதிக் கும்படி நெஞ்சிசையே. (க)

## காரணம்.

வெள்ளைக்கவித்தா ரணித்தருச் சாகை விரித்தபுலங்
கொள்ளைக்கவித்தா ரணியத்திசைமனங் கூட்டநொந்தே
னுள்ளைக்கவித்தா ரணிசாந்தலிங்க னுவக்குமிசைப்
பிள்ளைக்கவித்தா ரணிவன்மெஞ் ஞானப் பெருக்குறவே. (௨)

(உரை) தாரணி – உலகமென்னும், ஆரணியத்து – வனத்தின் கண், தரு – பிறவியாகிய மரத்தில், சாகை – கிளைகளாக, விரித்த– பிரிந்த, புலங்கொள் ஐக்கு – பஞ்சேந்திரிய போகங்களுக்கு இரை யாக, அவித்து – ஆன்மஞானத்தைக் கெடுத்து, வெள்ளை – பேத மையுடன் கூடிய, கவி – குரங்கை, இசை – ஒத்த, மனம் – மனமா னது,கூட்டநொந்தேன் – பிறவித் துன்பத்துள் ஆழ்த்த வருந்தி னேன். ஐக்கவித்தார் உள் அணி எனப் பிரிக்க.

## பயன்.

சங்கிசை யுஞ்செவி யாற்களத் தானெனச் சாற்றவிடப்
பங்கிசை யும்பச்சை நாயகிகொங்கிசை பற்றமைந்து
தங்கிசைச் சாந்தலிங் கக்குர வன்சிர்ச் சலதியெனப்
பொங்கிசை வானத்தி னங்கிசை வாக்கும் புகலினர்க்கே. (௩)

## அவையடக்கம்.

வெறியாமை யந்திரி போடறி யாமை விலக்கியருட்
குறியாமை யத்தேற் றிசைச்சாந்த லிங்கக்கார் கோளிடத்திற்
செறியாமை போலஞ் சடங்கல்கல் லேன்வாய் திறந்தனனென்
னறியாமை கண்டோர் பொறுப்பர் பொருர்க்கியா
[னதிகத்தனே. (௪)

## நூற்பிறப்புக் காரணம்.

கதிபதி திருப்பேரை யூரினுக் கொப்பிலணி
 கலமொத் திடுங்கவின்சால்
 காட்சிமா தவசாந்த லிங்கதே சிகன்மடங்
 கனிவின்மெய்க் காவலாற்று
மதிபதியு மதிபதியு ளாறுமுக சாமிபெறு
 வாஞ்சைசத் வித்தியாசன்
 மார்க்கசங் கத்தையாற் றறுபத்து மூவர்த
 மடம்பால னம்புரியுமா
பதிபதி யுரங்கரம் பொலிசிதம் பரமுனி
 பகர்ந்தசிர் சாந்தலிங்கப்
 பரமகுரு திருவுளத் திசைகுறிப் பென்னவிக
 பரசாத னங்கள்பெறுவான்
துதிபதிபிள் ளைத்தமிழி சைத்தனன் றெண்டர்கொடு
 தோத்திரிக் கப்புத்தகத்
 தொகைவிருந் திடுகவண் டம்மைகதி யிசைதவந்
 தோய்ந்துமிக வாழ்கமாதோ. (ரு)

பாயிரமுற்றிற்று.





சாந்தலிங்கசுவாமிகள்.

உ

சிவமயம்.

## நூல்.

### காப்புப்பருவம்.

---

#### திருமால்.

அகத்தடை படுத்திரு ளகத்துறு தாகந்து
கமலமரு ளார்விளக்கந்
தோய்வித்தி யாதத்து வத்துயிர்க் கிச்சைபவை
துய்ப்பித்து மெய்ப்பித்தறச்
சகத்தடை பவப்பயன் றந்தருளி மெய்வழிச்
சாராத தானவரனார்ச்
சங்கார மாற்றுமொய்ம் படைபைம் படைக்கலந்
தாங்குமரி தாள்பணிகுவாம்

இகத்தடை தரும்பயனல் லாரிணைக் கம்பூசை
யிணையன்றி யொன்றுமின்றென்
னிரதமிசை சரதர்மொழி வழிசெலும் விரதர்பர
விடமாசி யாம்பூரண
மகத்தடையு மன்பினர்த மகமுகக் கட்கின்ப
வாரிதேக் குங்கருணைசால்
மங்களம் பொலிசாந்த லிங்கனைப் புவியிலருண்
மணமுறக் காத்தருளவே. (க)

## பரமசிவன்.

தனனதனத் தாந்ததந்த—தானனத்தாத்தன

அரியாமெனைப் போன்றுயர்ந்த பெரியாரிலைத் தாங்குமுந்தி
யலர்மீதினிற் றோன்றியொன்று தேன்மடுத்தார்க்குமோ
ரளியாமெனப் போந்தவெண்க ணுடையாயெனிற் றீர்ந்தவண்ட
மமையாவிமுற் றோம்புகின்ற பான்மையுட்கூர்த்தெண
வயனேயெனத் தாம்புரந்த பொருடாமுதிப் பேன்றதெங்கு
ளறிவிரெனக் காந்துகண்கொள் போரியற்றுற்றலோ
ரகமேலிளைத் தேங்கவங்கி வரையாவெளிக் காணகநின்றெய்
தடிநீண்முடிப் பாங்குகண்டி டாவருட்சிர்த்திசால்

விரிசோதிமிக் கான்றதுங்க வடிவாளனைப் பாண்டியின்கண்
மிளிர்பானைனெய்த் தாண்டயர்ந்த காலைமிக்காற்றுருன்
வியனார்துணைப் பூம்பதங்க ளிடைதேய்செருப் பேந்திமிஞ்சும்
விறகார்தரத் தாங்கிநொந்து ளாரின்மிக்கேக்கமாய்
மிடலார்விடப் பாம்பளந்த மதுராபுரிக் கூர்ந்துசென்று
விலைகூறிநற் பாண்செயுந்த யாளனைக்கிர்த்திதோய்

விதிர்வேலுடைச் சேந்தனைந்து கரனேகைமிக் கார்ந்திவர்ந்து
விளையாடுபொற் பேய்ந்தவிர்ந்த தோளனைப்போற்றுவாம்.

நரிநாய்கொடிப் போங்குகொண்டு ளருமானிடத் தாம்பவங்கொ
ணலமானதைத் தேர்ந்துயர்ந்த பேறுறக்கூர்த்திடார்
நவையார்பிணத் தூன்றிறந்த பிலவாய்திணித் தோர்ந்தமைந்த
நடையார்தவத் தேன்றிலங்கு சிலர்கட்பார்த்தரு
நகையாவழைத் தான்றசெங்கை புடையாசியத் தாழ்ந்தவஞ்செய்
நரகூடுகற் பாந்தமொன்று மீனர்கட்கேற்பதாய்
நவிலாகமத் தாந்தர்சிந்தை மிசைகூடுசித் தாந்தவிந்தை
நனியோர்தரத் தூண்டுமின்ப நாவினிற்சாற்றியே

பிரியாதுயிர்ச்சான்றினின்ற வருணீர்மையைக் கூர்ந்துணர்ந்து
பெருமாதவத் தோன்றலென்று பாரிடைத்தேற்றமார்
பிரதாபமிக் கூழ்ந்ததொண்டர் வழிபாடுபெற் றுண்டிலங்கு
பிழைதீர்சுகத் தேன்சுரந்து தேவர்மிக்கேத்துசீர்
பெறுபேரையிற் காஞ்சியுந்தி வலமேபெறச் சூழ்ந்துமுன்செல்
பிரகாசமுட் போழ்ந்தமைந்த கோயிலிற்பார்த்தபேர்
பிணிவேரறக் கிண்டெறிந்து சுகவீடமைத் தூன்றுகின்ற
பிறவாநெறிச் சாந்தலிங்க தேசிகற்காக்கவே.

## அம்பிகை.

*தனதான தத்தனன தாந்ததந்தத்தன தானத்தனத்தன.*

அணியார்ப ணிக்கிரண மிசைபூ ரணச்சசியொ
டலர்தாம ரைக்குளிகர் காந்திமிஞ்சப்பொலி வார்வத்திரத்திடை
யமைவான சுட்டியரு கினிலாத வக்கதிரி
லவிர்வாச னைத்திலக மோங்குநண்புத்துணை போலத்திருக்னயி

லகலாவி றற்சிலையோ ரிருபாலு முற்றதென
  வசைவார்ந் தற்கணிமை யாந்திறம்பெற்றலை வாரிச்குமிக்கரு
ளமையாது கொட்டியிரு செவிதோய ணிக்குழையொ
  டணைகூர்வி ழித்துணைகள் வாய்ந்தவின்பத்துமை யாளைக்கதிர்த்
மணிமானு மச்சுதனு மலராத னத்தயனு [திறல்
  மதியால ளப்பரிய தாஞ்சிரம்பொற்பத மாரத்தனுட்டின
மறவாதி ருத்தியுரு கிடுகாமர் பெற்றிலகு
  வளநீடு மற்புதமெய் தோன்றுகொங்கைத்திரு ஞானப்பொருப்
மதிதீரொ னக்குமுள மிசையேபெ ருக்கிலமை [பளை
  மடைதீர்க டைக்கணரு ளீந்திடும்பற்றிசை வாளைச்சிறப்பமை
மகிமாந லத்துமையை யொளிநீடு பொற்கொடியை
  மனவால யத்திணிடை யேந்தியன்பிற்கனி வாகிப்பழிச்சுதும்
விணிலார்பு லத்தினநு பவமாய நித்தமுறு
  மிகுபோக நத்தியுயிர் நீங்கவங்கிப்புடை யாகத்தையிட்டிடும்
வினையேம தித்தெளிஞ ருளமாரி ரக்கமுடன்
  விடுபாத கத்தொழிலின் மீந்ததென்றேப்புகி லாவற்பமுற்ற
மிகையேல ரக்கரென விகமீது நித்துயிரை [தென்
  விளையாடி வெட்டுசெயன் மாண்பதென்றெப்படி நாமொப்பன்
மிசைசாதி யிற்கொளுட லுடையோமெ னிற்பிறகில் [மற்றதை
  விழும்வாலி லைப்பலுகிர் நீண்டுருண்டப்படி யாகப்படைத்திலி
ரெணினிர்மு கத்தின்மயி ரிலையேய வற்றினின
  மெனவேகி ளக்கினணி தோய்ந்திடும்பெட்பிசை மாடத்தலத்
யெழினீடு கட்டின்மிசை யுறுகான்ம டக்கலில [திடை
  திடுபோர்வை யுட்படித லாங்கலிங்கத்துடன் மூடிச்சரிப்பதெ
னினிதாம ணத்தமைபல் வியமேது சட்டிமுத
  லியதேது ளத்தறிவு தோய்ந்துநன்குய்த்துணர் வீர்சற்றெனத்திக
ழிமையோரு மெச்சியல்ப லுபதேசம் வைத்தருளி
  யிசைபேரை யிற்குலவு சாந்தலிங்கப்பெரு மானைப்புரக்கவே. (௫)

## பட்டிவிநாயகர்.

தத்தனதானன தாந்ததந்த தத்தனத்தாத்தன.

மைப்பரிமீதினி லூர்ந்தவிந்தி ரற்கணிப்பூத்திரண்
மட்டவிழ்காநனி தியந்துலர்ந்தி டற்றவிர்த்தேர்ப்பலே
வற்றலில்காவிரி வாய்ந்தகுண்டி கைத்தமிழ்த்திர்த்தன்முன்
மட்டறுமாடல்செய் தான்றசெங்கை வைத்தகுட்டேற்றுபு

பப்பருள்வாரியி லாழ்ந்திறைஞ்ச வற்புதக்காட்சிகள்
பற்பலவேபுரி மாண்பிசைந்துண் மிக்கிளேத்தேக்குறு
பத்திமையேதுமி லேன்புகன்ற சொற்கவித்தார்ப்புனே
பட்டிவிநாயகர் பூம்பதங்கள் சித்தம்வைத்தேத்துவல்

பொய்ப்பகைவாதிக டாம்பகர்ந்தி கற்கொடுற்றூர்த்திடு
புற்றமைவார்பணி கான்றநஞ்சி னிற்றியக்கேற்றவை
புத்தியலாரமிழ் தாந்திரங்கொ டற்றிடச்சீர்ப்பருள்
பொற்பிசைவாழுப சாந்தவுந்தி யிட்டெமக்கூற்றெழூ

மெய்ப்பரஞானசு காம்பரங்கொன் முத்தியுட்கூட்டிடு
மெத்தநுபூதியு ளாய்ந்திலங்கு வித்தருட்காட்டிடு
மித்திரனேரொளி வாய்ந்துகொங்கி யற்றுநற்பாக்கிய
வித்தகமாதவ சாந்தலிங்க முத்தனைக்காக்கவே. (ச)

## முருகக்கடவுள்.

தானனத் தாந்ததந்த தாத்தனத் தாத்தன.

கானறுத்தேன்றதும்பு தோட்டணிப்பாட்டளி
கால்களாற்கின்றருந்த மாட்சிமைப்பூப்புனே
காரின்மாக்கூந்தன்மங்கை மார்க்குளத்தூற்றிசை
காதன்மீக்கூர்ந்துபொங்க வேற்றணிச்சீர்த்திகொள்

மானவேற்சேந்தன்மொய்ம்பின் மாட்சிமைப்பாத்தொடை
வானமேற்சார்ந்தவும்பர் வேட்குநற்பாற்சுவை
மானும்வாக்கேன்றபைம்புள் வாழ்க்கைபெற்றேத்திசை
வாரிதாட்டாழ்ந்துசிந்தை மேற்பதித்தேத்துதும்

வேனல்வேட்பூஞ்சரங்கள் காத்திரத்தேற்றுள
மீதுமீக்கூர்ந்தபுன்கண் வேட்கைமிக்காழ்த்திட
வேலைமேற்றூன்றுமிங்கொ டார்த்தபுட்கூக்குரன்
மேலதாப்போந்ததென்றி கூற்றெனச்சாற்றுபு

*பீனமேற்றேய்ந்தசிந்தை யோர்க்குளெட்டாப்பல
பீடுவாய்த்தான்றதொண்டர் பார்த்தடிப்பூத்துணை
பேணமார்த்தாண்டனென்று சீர்த்திமிக்கேற்றவிர்
பேரையூர்ச்சாந்தலிங்க மூர்த்தியைக்காக்கவே. (ரு)

## பிரமதேவன்

*தாந்ததந்த தானனத்தாத்தன.*

நீண்டவண்ட கோடிமுற்றுக்குபு
நேர்ந்தகும்ப லாவிகட்காக்கைகள்
நீங்கலின்றி யேபடைத்தார்ப்பிரு
னீந்தியின்ப விடுறக்காட்டிடு

மாண்டழைந்த வாணிபொற்கோட்டிணை
வாய்ந்தழுந்து மார்பனைத்தோட்டணி
வார்ந்தபங்க யாதனப்பாற்றினம்
வாழ்ந்திலங்கு நான்முகற்போற்றுதும்

---

* பீனம் — மெலிவு,

வேண்டலொன்றி லேமெனச்சாற்றிவின்
வேந்தனுங்கை மேலெடுத்தேத்திசை
மீந்ததொண்டர் கூடிநற்றுட்டுணே
வீழ்ந்திறைஞ்சு மாதவப்பேற்றெடு
தாண்டவஞ்செய் நாதனைக்காட்சிகள்
சார்ந்துகண்டு ஞானசித்தேற்றணி
தாங்குகொங்கொல் பேரையிற்சீர்த்தியல்
சாந்தலிங்க சாமியைக்காக்கவே. (சா)

## தேவேந்திரன்.

தானந்தன தன தானனத்தாத்தன.

வேலேந்தியமுருகோனிடப்பாற்பொலி
விரும்பிடிமணை மார்திருக்காட்சியை
மேல்வாய்ந்திடும்விழி யாயிரத்தேற்றியல்
வீடாண்டிசைநிலை யார்தவச்சீர்த்திகொள்
சேலேந்தியவிழி தோய்சசிக்கூற்றியல்
சேர்மாண்பிசைசுக வேலையுட்டோய்த்தவிர்
சீர்தாங்கணிமணி மாமுகிற்காட்சிசெய்
தேவேந்திரனையு ளாவலிற்போற்றுதும்
மாலேந்தியபொழி னீழலிற்சூட்டணி
மாணூர்ந்திடுமயில் கூடிநற்பேட்டுடன்
மாலேய்ந்தணிநட மாடிடக்கோட்டிடை
வாழ்வாங்கிளியொடு பூவைமிக்கார்ப்புடன்
நாலேந்தியன்மறை யோதநற்பாக்கிய
நாணீண்டவிர்கள மீதுபொற்பாற்பதி
நாணீண்டுறவவி ழாதுகற்பாற்பதி
ஞானம்பிகைமண வாளனைக்காக்கவே. (எ)

## திருமகள்.

தனத்தன தாந்ததந்த தனாதனத்தத்தனா.

முகத்தொகை நான்கமைந்த குமாரனுக்கேற்புயிர்
முழுக்கவுமேன்றவண்ட சராசரத்தாக்கைசெய்
முதற்றெழிலீந்துபின்பு மனோசனுக்காற்றலின்
முயக்கமெய்தாண்பெணின்ப விழாமருட்டோய்த்தவிர்
இகத்தினையோம்புபண்பு மணாளனுக்காக்கியு
மெவர்க்கெதுவேண்டுமென்று சதாவுளத்தாற்றெரி
யிலக்கமைவாய்ந்திரங்கு தயாவளக்காட்சியெய்
திலக்குமிபூம்பதங்கள் பராவிமிக்கேத்துதும்
மிகத்துறவேன்றவிர்ந்த விசாலமெய்ச்சாத்திரம்
விரித்திகவாஞ்சையொன்று மிலாதறத்திர்த்திடும்
விதத்தினிலாண்டமைந்து வினவுநர்க்கேற்புற
விரத்தியுண்மீந்தியம்பு தபோபலத்திர்த்தரோர்
சுகப்பெடைபோன்றமங்கை விடாதவிற்பாற்பொலி
சுகத்தினிலாழ்ந்தபண்பு தகாதெனக்காற்சிவை
துணைச்சிவநேர்ந்தமைந்த விநோதமுற்காட்டிடு
சுயத்தவசாந்தலிங்க சுவாமியைக்காக்கவே. (அ)

## கலைமகள்.

தனதாந்ததந்த தனாதனத்தாத்தன.

அலரேந்துமெண்க ணுளானகத்தாற்றிடு
மலகாந்தரங்க ளிலாவினைச்சேர்ப்புறு
மகிலாண்டமெங்கும் விராவிகற்கூட்டுக
ளறிவாய்ந்துணர்ந்து சுபாவமெய்த்தேற்றுயர்

தலமான்றசிந்தை யெனுவுயிர்ப்பாற்பொலி
தயைநீண்டெனெஞ்சி லுலாவுமெய்ப்பாக்கிய
தவளாங்கவெங்கள் பிராமிபொற்றுட்டுணே
தனைவேண்டியின்ப நிலாவிடப்போற்றுதும்

உலகேய்ந்தமைந்த ரவாவினிற்பார்க்கின்மெய்
யுணர்வீந்துசங்கை யுருதொழித்தேற்புறு
முயர்வான்கடந்த பராபரக்காட்சியெய்
துறுபாங்கவண்கொ ளிலேகருக்கேற்கையில்

தலமாண்பறைந்து தபோநலத்தாற்பரி
சனர்நீங்கலென்றென் விராகமுட்டோற்றல்செய்
தகைநான்குகொண்ட நனூலிகத்தார்க்கிடு
தவசாந்தலிங்க வரோதயற்காக்கவே. (க)

## முப்பத்துமுக்கோடி தேவர்.

கைப்பத்தியார்படை யுருத்திரரினங்களே
காதசத்தினர்பனிருவர்
கதிரவர்களச்சுவினி தேவரிருவோர்வசுக்
கணமெட்ட தாய்க்கவின்ற

முப்பத்துமுக்கோடி தேவர்களெனப்பெரிது
மூதுலக மேத்தநின்ற
முதியீரெனக்கருளு மதியீருமைக்கனிவின்
முன்னிமிக் கேத்துகின்றேன்

செப்பத்தியிடைதேவர் மொய்ப்பப்பரிந்துபர
சிவனுட மெய்ப்பத்திசால்
திருநாவலூராளி பெருகாவலிற்சார்
சிறப்பார் திருப்பேரையின்

மெய்ப்பத்துவிதமுற்ற வேதாந்தசித்தாந்தம்
விரவுசம ரசமாண்புதோய்
வித்தகச்சாந்தலிங் கத்தவக்குரிசிலையுள்
விழைவுடன் காத்தமையவே. (கO)

காப்புப்பருவம் முற்றிற்று.



## செங்கீரைப் பருவம்.



எழுபிறப் புந்திய வானவனவை திண்டிடா
தென்றதமிழ் வேதவுரையா
லிசையுமப் போதுமிப் போதுமெப் போதுமொப்
பேதுமற் றப்பழியிலா
முழுமைதோ யறிவறிந் திட்டமக வாமுன்னை
முன்னைமா தவபலத்தான்
முதிர்பூர ணச்சசிக் கதிர்போன்மெ னப்பெற்று
முளரியங் கைத்தலத்திற்
றழுவிமார் போடணைத் துச்சிமோந் திருகண்க
டம்மிலொற் றிடுநாளினுஞ்
சான்றோ னெனக்கேட் டுளங்குளிரு நற்றாய்
தனப்பால ருந்தியதிலார்
செழுமைசால் சாரமிடு செய்கையிற் பேரையிலொர்
செங்கிரை யாடியருளே
செங்கமல பதசாந்த லிங்ககுரு பரவேந்த
செங்கிரை யாடியருளே (க)

தந்தைமக னுக்காற்று நன்றியவை யத்தின்முற்
றுனுறச் செயலென்னவே
சாற்றரும றைக்குமிக மேற்றமைழத் தேற்றமார்
சத்வித்தி யாசன்மார்க்க
விந்தைபெறு சுங்கத்தி னிசைநாய கத்தருள
மிசைநாய கத்தலைமையாய்
மெய்க்கிசைத் திடுபெயருண் மைக்கிசைத் திசைலிங்க
மேனியுடன் மாநிலமுளார்
முந்தைமா தவபலத் தாற்பரவு கோயிலார்
மூர்த்தியாஞ் சீர்த்திவாய்ந்து
முன்னேற்ற மார்தந்தை யென்னேற்ற னன்கொலெனு
முறையென்று மென்றிலவிரச்
சிந்தையப் பாலிசைத் திடவருமொர் செல்வனே
செங்கீரை யாடியருளே
செங்கமல பதசாந்த லிங்ககுரு பரவேந்த
செங்கீரை யாடியருளே (உ)

பங்கயத் திணையணிச் செங்கரத் துணைதரைப்
பாலூன்றி மேலூன்றிடப்
பார்த்தெதிர்கொள் வார்சிந்தை யீர்த்துவாய் நகையாடு
பண்புசோ பானமான
விங்களத் துவிதவனு பட்சபகி ரங்கமிசை
மெய்ச்சரியை கிரியையன்பால்
விதிமுறைபு ரிந்துநிலை பெறினுட் புறம்பெனன்
மேற்காட்டி டுங்கணிசையும்

மங்களமல் கதனுலெ வற்றையுந் தன்னுளே
வைத்தமை யருட்கணமையும்
மத்திபெறு மதனுளே யொத்திசையு முத்திபெற
வம்மினென் றிடல்கடுக்கும்
திங்கணிகர் முகபேரை யிங்கடியர் பெறுமாறு
செங்கீரை யாடியருளே
செங்கமல பதசாந்த லிங்ககுரு பரவேந்த
செங்கீரை யாடியருளே (ங)

தரைத்தலேயி டத்தமையொர் தாளூன்றி யவிர்வலத்
தாளெடுத் திடுதிறம்பா
தலமுற்ற பேர்க்கும்வின் டலமுற்று ளோர்க்குமரி
தாமானி டப்பிறப்பென்
றுரைத்தலேத ராதிங்ங னுறுதிபெற வுறுதிரென
வோதிடல்க டுத்துமண்மே
லுற்றதாட் பொடிசிரம் பெற்றபேர் கதிபெறுத
லுண்மையென் றிடனிகர்த்தும்
வரைத்தலேவி திப்பிரம ஞரியற் றுடலினபி
மானமறு ஞானமோன
வாழ்விலுட லோடமைமி னென்கையொத் தும்வெள்ளி
மன்றினிடை யொன்றுநடனத்
திரைத்தலேய சைத்தொர்காற் றாக்குமவன் யானெனச்
செங்கீரை யாடியருளே
செங்கமல பதசாந்த லிங்ககுரு பரவேந்த
செங்கீரை யாடியருளே (ச)

அங்கைத் துணைப்பா லணைத்தன்னை முத்திமிக்
காா்வமுள் ளூற்றெடுப்ப
வணிமணிப் பணிபூட்டி யிருவிழித் துணைநாட்டி
யாவலிற் பாராட்டுகாற்

கொங்கைத் துணைப்பால னுய்ப்புரப் பேற்குனது
கொங்கைத் துணைப்பாலனுய்
கொடுவென் றருந்தியு ளருந்துயில் புரிந்திடுதல்
கோலமுறு தன்றொடொழுஞ்

சங்கையில் பலர்க்குமுமை யன்னைபா லருளெனத்
தவமுபன் றிடுதல்போலும்
தக்கபிற வாநெறிப் பெயருற்ற மேலைச்சி
தம்பரப் புகழ்காணவே

செங்கைத் தலப்பால மாயைத் தியக்கறவொா்
செங்கீரை யாடியருளே
செங்கமல பதசாந்த லிங்ககுரு பரவேந்த
செங்கீரை யாடியருளே (ரு)

வேறு.

திங்கணிலவாா் முகமாடச் சென்னிமிசைசூ ழியமாடத்
திலகஞ்சுட்டி யிசைந்தாடச் செவியிற்பொலிபூ ணசைந்தாடச்
செங்கணிலவு மணியாடச் சிவனுண்ணடனங் கனிந்தாடத்
திரளானந்தத் துளியாடத் திருநீற்றொளிமேற் பரந்தாடப்
பைங்கணிலவுஞ் சேடனம்பேர் பறிக்கவுதித்தா னிவன்பாதம்
பரிக்கும்பேறு பெற்றுநந்தம் பாவப்பாரங் குறைந்தனமென்
றங்கணிலமா துடனுட வாடியருளாய் செங்கீரை
யணியாா்பேரூா்ச் சாந்தலிங்க னடியருளாய் செங்கீரை (சா)

மாற்றம்பொலியு மாயைகன்ம மாற்றம்புரியுந் தவப்பெருமை
மருவியெதிர்தோய் வார்மனத்தை மாற்றுந்திடுபொன் மயமாக்கு
மேற்றம்பொலிவித் துருமவொளி யாக்கைபொருத்த மாட்சியுளா
னிடைநாணணியா யுருகியடி யேறிப்புலம்புஞ் சிலம்பாகித்
தேற்றம்பொலிகைப் பிடியகலேன் சேர்ந்தேன்காப்பாய் விரலிலுன்
திரமாயமைவே னெனுந்தங்கத் திரளார்பணிக ளதிர்ந்தாட [மோ
வாற்றம்பொலியார் பேரூரி லாடியருளாய் செங்கீரை
யணியார்சாந்த லிங்கசுத னுடியருளாய் செங்கீரை. (எ)

தானனதாந்தன தந்தனதானன தானனதந்தான

நானிலமியாண்டுநன் மங்களமாவன நாளுமெழுந்தாட
நாவலர்கூண்டவிர் செந்தமிழார்கவி நாவினவின்றூட
வானிடமோங்கினர் தம்பகைபோயலர் மாரிபொழிந்தாட
மாதவமாண்பினர் சிந்தையிலேசுக வாரியெழுந்தாட
ஆனிடமாம்பொரு ளைந்தையுமாடின ரார்வமிகுந்தாட
வாதரமேய்ந்தவர் கண்களில்வீழ்துளி யாகநனைந்தாட
ஆனியில்வான்புகழ் விஞ்சியபேரையி லாடுகசெங்கீரை
ஆரியசாந்தவி லிங்கவரோதய னுடுகசெங்கீரை (அ)

தனனுதாந்த தந்தனதானு தந்தாதந்தான

அறமேதேங்கு மன்பரவாவா ரங்காபொங்கார்வ
மகமேனீங்க வின்றியமேலோ ரங்காமின்போரு
முறவாயோங்கு மங்களபோதா வுண்டாடும்பேய
ருணராமாண்கொ ளுந்தவநாதா வொண்பேரின்பாகும்
நிறமார்தேன்பெய் பங்கயபாதா நின்றூய்கின்றேருள்
நிறைபெறான்று மங்களநாலா நெஞ்சார்நன்பேரை

சிறவாவேய்ந்த தண்டளியோனே செங்கோசெங்கீரை
திருவார்சாந்த லிங்கசுவாமீ செங்கோசெங்கீரை (கூ)

தாந்ததந்ததன தாந்ததந்தன தந்தாதந்தான

கூன்றயங்குபிறை யான்பிறங்கியகை கொண்டோயன்பாளர்
கூண்டயர்ந்தபணி யேன்றுவந்தருள்செய் குன்றேவன்பே
நான்றடங்கவருள் கூர்ந்தியைந்துணர்வு நன்ருகும்போத [யர்
நான்கிலேந்தமைய மேம்படும்படிந வின்ருய்கொங்கூடு
சான்றமைந்ததவ மாண்பரென்றுமிசை தங்கோரின்பேரை
சார்ந்திலங்குமட மேன்றிலங்குதளி தந்தாய்நந்தாது
தேன்றதும்புமல ராம்பதங்கொண்முனி செங்கோசெங்கீரை
சேண்பொருந்திசைகொள் சாந்தலிங்கமுனி செங்கோ
[செங்கீரை (கO)

சேங்கீரைப் பருவம் முற்றிற்று.



## தாலப்பருவம்.



இயல்வாயருமைத் தவப்புலவ ரிதயத்தலத்தி னெழுங்கவிபோ
லிமிழ்சிகரசா கரத்திடையெம் மிருளார்கூந்தற் குவமைபெறப்
புயல்வாய்மடுத்தெய் துற்றவுவர் போக்கிமதுரந் தேக்கிடலிற்
போந்தமதுரைப் பரன்கவியிற் புகழும்புதுமை பொலிமணத்
கயல்வாய்காஞ்சி பெற்றமையக் கனிவிற்றருது மெனமாதர் [தைக்
கனித்துள்ளொளித்துக் குளித்தமைகாற் களபத்தெருவுங் கலந்து
வயல்வாய்வளஞ்சேர் திருப்பேரூர் மைந்தாதாலோ தாலேலோ [தட
மகிமைச்சாந்த லிங்கவருண் மைந்தாதாலோ தாலேலோ. (க)

ஆந்திக்களிக்குஞ் சேரர்பிரா னணியுந்தெரிய லாந்தருவி
லமையுமரியன் மிக்கருந்தி யயருங்கடையர் தாமயக்க
நீந்திக்களிக்கும் படிபுருவ நெடுவிற்குனித்துக் கண்களெனு
நீலக்கணைதா மரைக்கணையு நிறைபற்றளவொ டிருகுடங்க
ளேந்திக்களிக்கும் படிவிழிவா யூட்டவிழி வாயூட்டு
மிசைமாத்திரைவர்த் தனச்சுகமிட் டிடையாரிடையோ ரிடையி
மாந்திக்களிக்கும் வயற்பேரூர் மைந்தாதாலோ தாலாலோ [லது
மகிமைச்சாந்த லிங்கவருண் மைந்தாதாலோ தாலேலோ. (௨)

மணக்குந்துறவு நெறிமகிமை வாய்ந்ததிருவெண் காட்டடிகண்
மலர்வாய்ப்பிறந்த செழுந்தேனூர் மதுரத்திருப்பா டலினல்லோர்
இணக்குஞ்சிவபூ சனையுமன்பு மின்றியிகத்தோர் பயனுமில்லை
யென்றுபுகலு மிலக்கணத்துக் கெடுத்துக்காட்டு மிலக்கியம்போற்
குணக்குந்தியகற் றிசையிலணிக் கோயின்மடமுஞ் செய்ததன்கட்
குணக்குன்றாய்நின் றெய்துநர்க்குக் குருவாய்ப்பரமன் றனதடி
வணக்குந்திடச்சாற் றிடும்பேரூர் மைந்தாதாலோ தாலேலோ [கள்
மகிமைச்சாந்த லிங்கவருண் மைந்தாதாலோ தாலேலோ. (௩)

விண்ணங்கடுக்கு மிலாங்கலியின் விரையார்விரிபா ளைகடோறும்
மிஞிற்றுக்கணஞ்சூழ்ந் திசையெடுப்ப மீதுகமஞ்சூன் மேகமுறல்
பெண்ணங்கடுக்கு மிடப்பாகப் பெம்மானுடன்சுப் பிரமணியப்
பெருமான்வானோ ரினமேத்தப் பிடிகைப்பிடிகாட் சியில்யாமும்
மண்ணங்கடுத்துப் பூமாதை மணப்பாமெனமேன் மண்டபத்தில்
வதிந்துவேத மறையவர்தீ வளர்த்தும்புகையி னுடன்மால்சார்
வண்ணங்கடுக்குந் திருப்பேரூர் மைந்தாதாலோ தாலேலோ
மகிமைச்சாந்த லிங்கவருண் மைந்தாதாலோ தாலேலோ. (௪)

தானமணக்குந் தருமத்தந் தாங்குந்துதிக்கை யிடங்களெல்லாந்
தவமான்மியந்தோய் வரப்பிரசா தங்கண்மணக்குங் கோயி
ஞானமணக்குந் திருமேனி நால்வர்திருவாய் மலர்திருப்பா [லெலா
நயமேமணக்குந் திருப்புகழ்தோய் நாதமணக்கும் வீதியெல்லா

மானமணக்குங் கற்புடையார் மகிழ்வின்மணக்கு மனைகளெல்லாம்
வாழ்த்துமணக்குந் தன்டருவின் மலர்கண்மணக்கு மெண்டிசை
வானமணக்கும் புகழ்ப்பேரூர் மைந்தாதாலோ தாலேலோ [யும்
மகிமைச்சாந்த லிங்கவருண் மைந்தாதாலோ தாலேலோ. (ரு)

வேறு.

பித்துவப் புறுகன்ம வநுபோக மிசையிச்சை
பெற்றுளறி வற்றுலகெலாம்
பேயாக வெருவைநரி நாயாக வாகப்
பிராந்திமிக் குற்றுளத்தே

நத்துவப் புடனுவர்ப் புறுகருவி கரணமிசை
நனவுகன வாமவத்தை
நாளுமலே வேற்றவலே மேற்றிரண மொத்துநனி
மொத்துதலி னெய்த்தவெற்குச்

சித்துவப் புறுமாத வத்துவித் துவரவைவ
சித்துமன மாயைகளெலாஞ்
சிரத் தவிர்ந்துளதி நிரத்த விர்ந்திடுஞ்
சிலநித் திரைபொறுத்தச்

சத்துவப் பேரைவரு சாந்தலிங் கேசனே
தாலேலல தாலேலவே.
தருவாதி யைக்கொளரு ளநுபூதி யைக்கொள்குரு
தாலேலல தாலேலவே. (சா)

ஏங்கிச்சை சவமுற்ற பருவனுப் மூலமல
விருளினுற் ருங்குதோய்மெய்
யிச்சைசெய றிவரும் பாதகின சேதனத்
தியல்புற்ற வென்னைமருளில்

வாங்கிச்சை தன்னியவி ளக்கமறு மாவினசு
மானருடன் வைக்குமதனன்
மனைமக்க ளென்றகொடு வினைசுற்று பொய்க்கனவு
வாட்டவெய்த் தேனருட்கண்

தூங்கிச்சை கொண்டனனஃ தானனவி யற்கைச்
சுழுத்திநிலை மேலமைத்துத்
துணைபுரிய நின்னடித் துணைபிடித் தேன்கதிச்
சோதிகொள்ச மாதிவிட்டுத்

தாங்கிச்சை தோய்பேரை யூர்ச்சாந்த லிங்கனே
தாலேல தாலேலவே
தநுவாதி யைக்கொளரு ளநுபூதி யைக்கொள்குரு
தாலேல தாலேலவே. (எ)

தந்தன தாந்தந்த தந்தன தானதந்த தானதான.

வஞ்சகமாழ்ந்தநெஞ்ச மொன்றியவீணர்கும்பல்
வாழ்வூடேறாதே
மங்களமீந்திலங்கு செம்பொருளாயுமன்பர்
மாணூடாமாறே

மஞ்சளியீண்டிநன்கு திங்களெலாமிசைந்து
வான்மேலானதே
வந்துலகோம்பிநின்று வண்புலவோர்சொல்பண்பின்
மாறாநீர்தோய்வான்

மிஞ்சவமேந்துபுன்கண் வன்கலிமாறிமைந்தர்
மேன்மேல்வாழ்வார்சீர்
விந்தைகளோங்கறங்க ளொன்றறவேபுரிந்து
மேல்வீடேய்வானீள்

தஞ்சமெய்தாங்குதொண்டர் கும்பல்கொள்பேரைமைந்த
தாலோ தாலேலோ
தண்டருசாந்தலிங்க மென்றவிர்வீரசிங்க
தாலோ தாலேலோ. (அ)

தந்தா தாந்ததந்த தந்தா தானதந்த தானதானா.

கொங்கார்மாண்டதும்பு செந்தேன்வாசகங்கொள்
கோமானேநீள்சீர்
குன்றுதோங்குகின்ற குன்றேதேசவிர்ந்த
கோலாமேலோனே
அங்காம்வான்பொருந்து மெங்தேவாமதென்று
மானதேவாதா
டண்டாரோர்ந்திணங்க வின்பார்சீலவுந்தி
யாநாலோதார்வா
மங்காதாம்பரன்கொ ளங்காபேரகண்ட
வானர்வாழ்வூடே
வந்தேசூழ்ந்திறைஞ்சு கின்றோராவிதங்கு
மாருள்பேரூர்வாழ்
சங்கார்காஞ்சியுந்தி யின்பார்கோயின்மைந்த
தாலோ தாலேலோ
சம்பார்சாந்தலிங்க துங்காவீரசிங்க
தாலோ தாலேலோ. (கூ)

தானதந்ததன தாந்ததந்ததன தானதானா.

மாதவங்குலவு மாண்பர்சிந்தைபொலி வாழ்வேதாலேலோ
வாழியென்பவரை வாழ்ந்திலங்கவருள் வானேதாலேலோ

பூதலந்தொழுப தாம்புயங்குல்வு பூபா தாலேலோ
போரிதங்குமுனி வோன்றனெஞ்சிலிசை போதா தாலேலோ
நாதவந்தமிசை யோங்குமின்பகுரு நாதா தாலேலோ
ஞானவின்பசுக மீந்தகொங்குவள நாடா தாலேலோ
தாதவிழ்ந்தபொழி தேன்பொதும்பரணி சார்வார்பேரூர்தோய்
சாதுசங்கமிசை சாந்தலிங்கமுனி தாலோதாலேலோ. (க0)

தாலப்பருவம் முற்றிற்று.

---

## சப்பாணிப் பருவம்.

---

நம்புபட் சத்தினர்க டாஞ்செயல் செயற்கைவகை
நன்குதெள் ளித்தெளிந்து
நவையான விவையவைகொள் சுவையான வவைகளென
நாடாதி யற்றல்கொண்டு
வெம்புபட் சத்திற்கை விடனீதி யன்றென்னும்
வேதவிதி யாற்கொடியனேன்
மிக்கதலை விதிவழிப் புக்கபொழு திதுதக்க
விதியலையி திற்செல்கென்னப்
பம்புபட் சப்பெரியர் தந்திருத் திப்படி
திருத்திப் பயன்பெறச்செய்
பண்பைநம் பிடுமெனது நண்டையு ளகங்கொண்டு
பதிபதியு மேன்மைசான்ற
சம்புபட் சமனுபட் சக்கையிற் பேரையிடை
சப்பாணி கொட்டியருளே
தபசாந்த லிங்கருரு வுபசாந்தி தங்கவொரு
சப்பாணி கொட்டியருளே. (க)

சுதாகரன் கலைசூரி யன்கலை யணைந்துற்ற
சுழிமுனைய தாதல்போன் றுந்
தோன்றுசர மட்சரத் திடையொன்றி நின்றிடுந்
தோற்றமொத் துஞ்சுடர்குலா

முதாசினனு டன்கலந் திட்டகற் பூரத்தை
யொத்துமுலை யாரிரும்பி
லொன்றுநீர்த் துளிபோன்று மோங்குதரு நீழல்புக
நீங்குமுரு நீழல்போன் றும்

விதாவிதவு டுக்கணம் விரோசனன் கதிரிடை
விராவிமறை பண்பிசைந்தும்
விவிதமுறு கலையெலா நாதமிசை யிற்கரையும்
விதமொத்து மெய்ச்சத்தமேற்

சதாசிவம்வி ளங்கிடவு தாரநற் பேரையிடை
சப்பாணி கொட்டியருளே
தபசாந்த லிங்ககுரு வுபசாந்தி தங்கவொரு
சப்பாணி கொட்டியருளே. (உ)

திட்டிகொடு கண்டதே காட்சியென் றுங்கொடிய
தேகான்ம புத்தியதனாற்
சேர்தரக் கொண்டதே கோலமென் றும்பொலி
செருக்கிற் றருக்கிற்படும்

பட்டிமைகொள் புலவாயி லார்காட்சி மானதம்
பயில்காட்சி தன்வேதனைப்
பாற்பட்ட காட்சிகளி லேற்பட்ட சுசமிடர்கள்
பற்றியப கற்கனவி

லொட்டியெட் டிக்கனிக ளுண்டயர்ந் தேனுண்மெய்
யுணர்வுதரு மாயோகமே
லுற்றவுயர் நிருவிகற் பஞ்சகச நிலையுதவ
வே.ாங்குறக் கஞ்செய்வோனைத்

தட்டியெழு வித்தலிற் பட்டியிசை பேரையிற்
சப்பாணி கொட்டியருளே
தபசாந்த லிங்ககுரு வுபசாந்தி தங்கவொரு
சப்பாணி கொட்டியருளே. (ங)

புகுமாத வங்கோடி கோடியுற முன்னம்
புரிந்துட் பரிந்திட்டதாற்
பொற்புமிகு வெற்பரைய னற்புதல்வி யென்றுறும்
புகழ்ஞான மேனிகாட்டி

மிகுமாத ரத்தாட்சி பெறுநீண்மு கக்காட்சி
வியனீட்சி மாட்சியிலகும்
விரிவார் மணக்காட்சி தருபச்சை மரகதநன்
மென்கொடியி டப்பாலுற

நெகுமாத ரக்காட்சி நல்கவிரு கண்களா
னேருறக் கண்டுருகியே
நெக்குநெக் கழலிழுது போலுளங் கனிவான
நிலையிலிரு வருமுவந்து

தகுமாசி தருமகத் துவபால பூரண
சப்பாணி கொட்டியருளே
தபசாந்த லிங்ககுரு வுபசாந்தி தங்கவொரு
சப்பாணி கொட்டியருளே. (ச)

சிலையாகி வன்கரடி புலியாகி மும்மதச்
சிந்துரம தாயாளியாய்ச்
சிங்கமாய் ஞாளியாய்ப் பேயாய்க் குரங்குநரி
செந்நா யுடன்பன்றியாய்க்

கலையாய் விகங்கத் திரட்களிலெ லாமாய்க்
கவின்கிருமி கீடமாகிக்
காணுறுபுல் பூடாய்த் தருக்களாய்ப் பாம்பாய்க்
கணக்கறு பிறப்பெடுத்தோர்

நிலையாகி லேன்வினைக் காற்றுந்தி விண்சொர்க்க
நிரயத்தி லாழ்த்தநொந்தேன்
நீகை விரித்தகற் றுதுகூட் டுதல்போல
நிமலநிறை பரிபூரணத்

தலையா கிடப்பொருவ திலையான பேரையிற்
சப்பாணி கொட்டியருளே
தபசாந்த லிங்ககுரு வுபசாந்தி தங்கவொரு
சப்பாணி கொட்டியருளே. (ரு)

வேறு.

தொண்டன்புடையார் விழிகொட்டுந் தோற்றமகன்று கடைக்கண
சுரந்துகொட்ட நிட்டையிற்சிற் சுகவானந்தங் கொட்டிடவும் [ருள்
வண்டர்கரத்திற் றேள்கொட்ட மதுமாமிசங்கள் ளரக்காதி
வாரிக்கொட்டு மவர்சிரத்தில் வாயிற்கன்மண் மிகக்கொட்ட
விண்டங்கிசையார் கோயிலெலாம் விளங்கிச்சேமக் கலங்கொட்ட
வியனரண்ட ரைந்தருவின் விரைப்பூமாரி மிகக்கொட்டக்
கொண்டன்மதிமும் மழைகொட்டக் கொட்டியருளாய் சப்பாணி
கொங்கார்சாந்த லிங்கமுனீ கொட்டியருளாய் சப்பாணி. (சு)

மதுராகரச்செந் தமிழ்த்துறைசால் வளமைமிகுமா தவப்பெருக்கம்
மலியும்பெரியோர் தம்முளத்தை வாரிவழியுங் கவியேபோல்
மதுவார்மலர்க்கா னிடையளிந்து வழியுங்கனிச்சா றணிவாவி
வாவிக்கரைப்பக் கரைப்பேராய் வரம்பற்றிடல்போல் வரம்பற்ற
விதுவார்சடிலத் தெம்பெருமான் வீதிவிழாக்கண் விழுங்கணின்ப
மிகுநீருள்ளங் கரைந்துருவ மேனிகரைப்ப வெளிக்கொளுலாக்
குதுகூலந்தோய் பேரூரிற் கொட்டியருளாய் சப்பாணி
கோங்கார்சாந்த லிங்கமுனி கொட்டியருளாய் சப்பாணி (எ)

தனதானதந்தன தனதாந்ததந்தன தத்தாதத்தான.

கனவானவம்புவிகொள் பெருள்வாஞ்சைமிஞ்சியியல்
கற்றோர்மற்றோர்கள்
கனிவோடடைந்திடினு மெதிரேன்றுவந்துபக
ரிக்காமற்சிறி
வனமார்விலங்கனைய குணமேய்ந்தகன்றொழிவர்
மைத்தோய்கட்பார்வை
வளமேவுமங்கனையர் மொழியோம்புதொண்டுவகை
வைப்பாரெய்ப்பேற
மனமாயவைந்துபுல னிடைநீங்கிநின்றுசுக
வைப்பூடெப்போது
மகிழ்வோடமைந்தவர்கள் குழுவோங்கவன்கருணை
வைத்தேநற்பேரை
கோனவாவியன்றவமெய் திடுமாண்பமைந்தமுனி
கொட்டாய்சப்பாணி
குணமேருவென்றுதிகழ் வரசாந்தலிங்கமுனி
கொட்டாய்சப்பாணி (அ)

தானதந்தன தாந்தநந்தன தத்தாதத்தான.

ஊனருந்தியுட லோம்பும்வண்டர்கட முற்றார்பெற்றார்கள்
ஒதைகொண்டகடல் சூழ்ந்திடும்புவியி னுட்சார்பற்றான

மானமின்றியவ மோங்கிவெந்துயரம் வற்றுதுற்றார
வாடிமங்கவுனை வேண்டுதொண்டர்கண மைக்காரப்பாரு
மேனலங்கொள்பயிர் போன்றறங்குலவு வித்தேயிப்பாரு
மேலியைந்தவுல கேந்துமும்பர்களு மெச்சார்வத்தோடு
கோனலம்பெறவொல் காஞ்சியுந்தியிடை கொட்டாய்சப்பாணி
கோலமிஞ்சுமுபர் சாந்தலிங்கமுனி கொட்டாய்சப்பாணி.()

தானனதான தாந்தனந்தான தத்தனதத்தான.

நீயிசைநூலா ராய்ந்துணர்ந்தான நித்தியநற்போத
நேயம்விடாதே தாங்கியின்பார்வா னிட்டைகொண்மெய்ப்பேறு
தோயியல்வூடே வாய்ந்திடுந்தூயோர் துற்றுநின்மெய்க்கோயில்
சூழ்தரமேல்வீ டாங்குறும்பேறே துய்த்தினியிப்பார்கொள்
சேயினிலோர்தா யீந்திடும்பாலார் திற்றிநசைக்காது
தீர்தரநேரே போந்துளன்பாலே சித்தியிடப்பேரை
கூயிசைசீர்சால் சாந்தலிங்கேசா கொட்டுகசப்பாணி
கோதறுமேலோர் தாழ்ந்தெழும்போதா கொட்டுகசப்பாணி. ()

சப்பாணிப்பருவம் முற்றிற்று.

---

## முத்தப்பருவம்.

---

தானம்பொலியுந் தாபரத்தின் சாகைபிரிந்த வேற்றுமைதோய்
சனனச்சங்கை சாற்றிடவா சங்கையமைவே றுண்பெண்ணை
யீனம்பொலியு மஃறிணையா யிசைந்தவிருகம் விகங்கவகை
யீந்தகுஞ்சு குட்டிகளா யியன்மூக்கமைநாக் கலந்தபவம்
மானம்பொலிநாட் டிடைமனித வருக்கச்சேயாய்த் தாயானார்
வழுவார்வாயாற் றந்தமுத்தம் வாங்கிமகிழ்ந்த தோடமற
மோனம்பொலிபே ரையிற்கனிவாய் முத்தந்தருக முத்தமே
முதிர்சீர்ச்சாந்த லிங்கவருண் முத்தாமுத்தந் தருகவே. (க)

சேவாகனனை யம்மையுடன் றெரிசித்தானந் தம்பொலிமெய்த்
திருக்காட்சியைக்கன் டன்பினின்றேத் திரஞ்செய்தேத்துந்
[தவங்கொண்மணி

நாவானதற்கு முறுவலுக்கு நவில்வித்துருமப் பெட்டகமாய்
நாவுக்கரசுஞ் சம்பந்த ஞானமணியும் வாய்மலர்ந்த

பாவாவனகொண் மறைக்காட்டின் பாலார்கதவம் போன்றும
பஞ்சாக்கரமந் திரம்பகர்காற் பரிவிற்றிறந்து மூடுநல [றைப்

மூவாதமையு நின்கனிவாய் முத்தந்தருக முத்தமே
முதிர்சீர்ச்சாந்த லிங்கவருண் முத்தாமுத்தந் தருகவே. (உ)

கறைதோய்பாவ மறச்சிவ கருணைபெருக்குங் கொலைமறுத்தல்
காளகண்டன் ருளகண்டக் கண்கூட்டிடலா மெய்பத்தித்

துறைதோய்வைராக் கியசதகஞ் சொற்றுத்துதிப்பார் மனமுருக்குந்
துதிப்பாவினங்க ளுளப்பாசந் துமிக்கும் வைராக்கியதீபம்

நிறைதோய்பரமா னந்தவரு ணிலையங்காட்டிப் புலத்திலுந்து
நெஞ்சக்கவியைக் கட்டியின்ப நிட்டைகூட்டு முந்தியெனு

முறைதோய்நூல்செய் நின்கனிவாய் முத்தந்தருக முத்தமே
முதிர்சீர்ச்சாந்த லிங்கவருண் முத்தாமுத்தந் தருகவே (௩)

பூர்த்தியிசையுஞ் சாவாத புதுமைமருந்தா யினும்விருந்து
புறத்ததாத்தா னகத்தினுக்குட் புசித்தல்வேண்டற் பாற்றன்றென்

ரூர்த்திபொலிவள் ளுவப்பெருமா னறையுமறையி னிறைமொ
[ழிபோ

லன்பற்றவனு யினுங்கருணை யமைசந்நிதிசார்ந் துன்வடிவை

நேர்த்திபெறக்கன் டிச்சைகொடு நின்றேன்சிவப்பி ரகாசனென
நிலவுதிருநா மம்பொருந்து நிறைவார்ஞானு னந்தகுரு

மூர்த்திடம்பெற் றிடுங்கனிவாய் முத்தந்தருக முத்தமே
முதிர்சீர்ச்சாந்த லிங்கவருண் முத்தாமுத்தந் தருகவே. (௪)

வழியுமதுரப் பொலிவிசைந்த வாய்வித்தாரப் புதுமைநலம்
வாய்த்தமூத்த மகன்மிகவு மாதாவுடன்றந் தையுமகிழப்
பொழியுமுபசா ரத்தினைப்போற் போந்தருதலை யிளமகவும்
புரியுந்தகையிற் றமிழ்த்துறையின் போதமமையேன் காதலினாற்
பிழியுமதுரஞ் சற்றுமிலாப் பிழைச்சொற்கொண்டு புலவர்கண்முன்
பெருகென்னறியா மைகள்விரித்துப் பிள்ளைத்தமிழ்மெய்ப் பேர
மொழியுங்கவிகேட் டுன்கனிவாய் முத்தந்தருக முத்தமே [மைத்து
முதிர்சிர்ச்சாந்த லிங்கவருண் முத்தாமுத்தந் தருகவே. (ரு)

வேறு.

ஒத்தித் தலங்களிடை முத்துற் பவிக்குமவை
யுற்றகுற் றங்களிவையென்
றோர்ந்தோர்ந் துணர்ந்துமதி கூர்ந்தோங்கு பாடல்களி
லாக்கிநோக் கித்தூக்கியே
சத்தித்த கடலியல் விற்பத்தி பெறுபுலவர்
சாற்றிடுதல் போற்றியானுந்
தக்கதுறை புக்கறைகி லேனுனது துறவறச்
சாத்திரத் தமையுமுண்மை
புத்தித்த லத்துற்ற தாலுநத் திக்கலம்
பொன்னேற்ற சுந்தரற்கும்
பொதுநடக் காட்சிதந் தயலுற்ற பதியினிற்
பொருளீகை கேட்டதாலும்
முத்தித் தலத்திலருள் சித்திக்க நின்பொன்வாய்
முத்தங் கொடுத்தருள்கவே
மூவேந்தர் நாட்டிலிசை பாவேந்த நாட்டிதமிழின்
முத்தங் கொடுத்தருள்கவே (சா)

பொய்த்தாப தர்க்குளுரு சிக்காத தாப்பல
புவிப்பிறப் பிற்றவஞ்செய்
புண்ணியத் திண்ணியக் கண்ணியன்மெஞ் ஞானப்
பொருப்பருள் விருப்பமமையும்

வித்தாகி நிலவுமுயர் சுத்தசா தகமாதி
விற்பனப் பொற்பணிகொளுல்
வெற்புதவு மற்புதச் சுதையுதவு சுதையுண்டுள்
விரவுமா னந்தம்வெளியில்

வித்தாங் கிசைத்தன்ப ரைத்தாங்கி யாரும்வடி
வேலேந்தி டுங்குமாரன்
மெய்ப்பே ரமைந்துமவ னெப்பேனெ னும்படி
விருத்தாச லத்தின்மிசையார்

முத்தாநதிக் குன்முழு குற்றோனு றத்தருநின்
முத்தங் கொடுத்தருள்கவே
மூவேந்தர் நாட்டிலிசை பாவேந்த நாட்டிதமிழ்
முத்தங் கொடுத்தருள்கவே (எ)

தனனதத்தன தாந்ததந்ததன தத்ததாந்தன தத்தன

இகமகித்தமென வோர்ந்திலங்குதுற
வெட்டிவாஞ்சைபரி சுத்தமா
பிணையில்பத்திமையு ளோங்கிடுந்தவமி
யற்றுமாண்பமைத லற்றகோ

சகமிசைப்படிவ மாந்தரென்றுகொடு
சற்றுமேம்படுந டக்கையே
தழுவலற்றவர்பொன் வாஞ்சைமிஞ்சிமிகு
தந்துளாழ்ந்ததுப ரற்றரு

நிகமவுச்சிமிசை வாய்ந்தசெம்பொருணு
ணித்துளாய்ந்ததனி டத்துவாழ்
நிமலசிற்சுகமெய் தோய்ந்திடுஞ்சகச
நிட்டையான்குலவ வக்கநேர்
முகமலர்ச்சிகொடு சார்ந்துவந்துபர
முத்தமீந்தருள்க முத்தமே
முதிரருட்குலவு சாந்தலிங்கமுனி
முத்தமீந்தருள்க முத்தமே (அ)

தனனதத்தன தாந்ததந்தன தத்ததத்தந்தனதன

பழுதியற்றிடும் வாஞ்சைவிஞ்சிய பற்பலர்க்குந்தயவொடே
பரவிடிற்பவ நீங்கியின்பமை பத்தியுட்டந்தருளியே
தொழுதிருப்பணி தாங்கியன்பிசை துத்தியத்தின்றெருகுதியார்
சுகவருச்சனை பாங்குடன்புரி சுத்தமிக்குந்திடவும்வா
னெழுமியற்றளி சேண்கொளண்டரு மிச்சையுட்டங்கினர்க
யிசையவற்புத காஞ்சியுந்தியி டத்தமைக்குங்குருபரா [ளா
முழுமதித்தகை வாய்ந்திடும்பர முத்தமுத்தந்தருகவே
முதன்மைபெற்றவிர் சாந்தலிங்கமெய் முத்தமுத்தந்தருகவே(கூ)

தத்ததத்ததன தாந்ததந்ததன தத்ததத்ததன தத்தன

அத்தநித்தமிக வேண்டிநெஞ்சினிலொ
ரக்கரத்துருவு முற்றிடா
வற்பரைத்துதிசெய் நிங்கமைந்துளறி
வற்றவத்துழல்கை கற்றுளார்
கைத்தலத்தணியு மாங்கல்யம்பொலிக
ளக்களத்திரம கிழ்ச்சியார்
கட்குறிப்பிலுறல் போன்றுவந்தனைக
டைப்பிடித்துனடி நத்தியே

சத்தசத்துணர்வு வாய்ந்துநின்புகழ்த
ளைத்துதித்திகம யக்கமே
சற்றுமற்றசுக மீந்திடுஞ்சகச
நிட்டையிற்பொலிய வைக்கவே
முத்தமிழ்த்துறையி னீண்டவின்பருளு
முத்தமிட்டருள்க முத்தமே
முத்தர்சித்தர்புகழ் சாந்தலிங்கமுனி
முத்தமிட்டருள்க முத்தமே (௧0)

முத்தப்பருவம் முற்றிற்று.



## வாரானைப் பருவம்.

வளமேவியவா னவருடம்பில்
வைத்தவுயிரு மற்றவர்தம்
மனைமார்களத்தின் மங்களச்சீர்
மலிமங்கலநா ணும்பொருந்தக்
களமேல்விடத்தை யமைத்தவருட்
கடலைக்கரத்தி லரத்தில்வைத்துக்
கண்கண்டுருகுஞ் செயல்போலக்
காணுக்கண்கொண் டோவியம்போ
லுளமேலென்று மகலாதன்
றாரும்பரம சமாதிநிலை
யொன்றியான்ற னெனுந்துவித
மொழிந்தஞான னந்தபரி

மளமேலோங்குந் திருப்பேரூர்
வாழ்வேவருக வருகவே
மகிமைச்சாந்த லிங்ககுரு
மணியேவருக வருகவே. (௧)

கானப்பிறவி பெறும்பறவைக்
கணமும்விருகக் கணங்களுந்தாங்
கள்ளமறியா துடலோம்பிக்
களிக்கும்பரிசி லிசைந்தனகாண்

மானப்பிறப்பாங் கலைபொதிந்த
மனிதருள்ளங் கொள்ளைகொள்ளும்
மதம்பேராசை யகங்காரம்
வரம்பற்றெழலான் மகிமையென்னே

மீனப்பிறவி யாங்குழிநின்
றெடுத்தென்றனை ஞா னநபவ
வியற்கையின்பச் சகசநிட்டை
யெய்தப்புரிந்திப் பவத்தினைமேல்

வானப்பிறப்பாக் கிடக்கருணை
மலையேவருக வருகவே
மகிமைச்சாந்த லிங்ககுரு
மணியேவருக வருகவே. (௨)

சகத்திலிசையு மருமைமரா
சன்மத்தடையும் பெரும்பேறு
சலனமளிக்கும் புறமாயைச்
சார்புமுழுதுங் கெட்டொழிய

வகத்திலிசையு முயிர்ச்சார்பா
மருளினிலேகண் டிசையுநிட்டை
யாற்றலெனநூ லிலக்கணத்தா
லறிவித்ததற்கோ ரிலக்கியமாய்
முகத்திலிசையுங் கண்காணு
முறையிற்புரிந்து காட்டியுங்கான்
முளையானவர்தொண் டேற்றின்பின்
மூழ்கச்செய்*தே னோர்மாசி
மகத்திலிசையப் பேரூர்வாழ்
வைப்பேவருக வருகவே
மகிமைச்சாந்த லிங்ககுரு
மணியேவருக வருகவே. (௩)

பணியேபணியாப் புனைந்துவக்கும்
பரமன்போற்றுேன் டன்பர்புரி
பணியேபணியாக் கொண்டருட்சீர்
பாலித்திடவான் கோயில்கொள்சிற்
குணியேயவிர்‡வித் துருமவணிக்
குன்றேயென்றே யென்றென்றுங்
குலவும்பரிபூ ரணவியற்கைக்
கோலாகலமெஞ் ஞானவரு
ளணியேயணித்தா யன்பரகத்
தன்னேதுறுநெஞ் சுடன்மாய
வாக்கைகரைத்திட் டன்னைமுலை
யப்பாலறவப் பார்கொள்சிந்தா

* ஏனோர் — ஒழிந்தோர்கள். ‡ வித்துருமம் — பவளம்.

மணியேவருக திருப்பேரூர்
வாழ்வேவருக வருகவே
மகிமைச்சாந்த லிங்ககுரு
மணியேவருக வருகவே. (௪)

திருவேவருக சிவஞானத்
தெளிவேவருக யாம்பொருந்துஞ்
சிறப்பேவருக சிந்தையுட்
டித்தித்தமுதூற் றெழப்புரியுங்
கருவேவருக வன்பர்களை
கண்ணேவருக விதயவனிக்
கமலமனைத்து மலர்த்திடுசெங்
கதிரேவருக வளர்கருணைக்
குருவேவருக வெமதுகுற்றங்
குணமாகிடநீற் றிடுநீற்றுக்
கோலாவருக விலிங்கவுரங்
கொண்டோய்வருக வுயிர்மலர்தோய்
மருவேவருக திருப்பேரூர்
வாழ்வேவருக வருகவே
மகிமைச்சாந்த லிங்ககுரு
மணியேவருக வருகவே. (௫)

வேறு.

கார்க்கணம் பயிரோம்பல் போல்வளர்த் தாறுவேலி
காத்தலிற் கண்கொளிமையிற்
காசினிய தென்றிட்டி யதிலினிமை தேரறக்
காட்சியுளு ணர்ந்திடாமற்

போர்க்களத் தலைகையென வேபினைத் தான்கொண்டு
பொய்யுடல் வளர்த்துநரரைப்
பொருந்தரிய தாமருமருந்தனைய மானிடம்
புக்கநல மிக்கிருமையுஞ்

சேர்க்கவரு மினையின்மெய்த் துணையாகி யுயிர்கொள்வா
னணையாய்ச் சிறந்துதொண்டர்
தித்திக்கு மாறுபிர சங்கமிசை சத்வித்
தியாவின்ப மோங்கிடுஞ்சன்

மார்க்கசங் கந்தழைய மூர்க்கரங் கங்கொழிய
வந்தருள்க வந்தருள்கவே
மறையேந்து துங்கவரு ணிறைசாந்த லிங்கருரு
வந்தருள்க வந்தருள்கவே. (௬)

செந்துவர்க் குன்றனைய மாதவப் புஞ்சமுறு
திருமேனி யும்பூரணத்
திங்களிக ரானதிரு முகமண் டலத்திற்
சிறந்ததிரி புண்டரமுநீள்

பைந்துறைத் தமிழோதை கொண்டமை துணைச்செவிப்
பண்புமிரு பதுமமொத்துப்
பரவையொத் திட்டவருள் வைத்திட்ட விழிகளும்
பகலாம்பன் மலர்செவ்வாயும்

மைந்துறுமி லிங்கவுர முங்கிரியை யோங்கிட
வளர்த்திடுதுணைக்கைகளும்
மற்றுள வுறுப்புக ளெலாந்தாங்கி யெம்மையப்
வகைதாங்கு தாள்பொர்த்து

மைந்தவஞ் சலையென்று ஞந்தருந் தயைபொங்கி
வந்தருள்க வந்தருள்கவே
மறையேந்து தூங்கவரு ணிறைசாந்த லிங்கமுனி
வந்தருள்க வந்தருள்கவே. (எ)

தனனதாந்த தந்ததனனதனன தனனதனதன.

சலதிமேய்ந்த கொண்டன்மிசைகொள்
சபலையனைய நிலைமைதோய்
தரணிமாந்தர் நன்குபுகழோர்
தகைமைமனதி னிடைகொள்வீர்
புலனுளோங்கி நின்றுநிறையொர்
புரணகருணை வடிவனே
பொருவில்சான்ற தென்றுளினிது
புரிமினெனமெ யுணர்வுதோய்
நிலவுபோன்ற லர்ந்தகருணை
நிமலவமல குருபரா
நிலைமைசான்ற வின்பம்விழிமு
னிலவுமவர்க ளிலகவே
மலதுவாந்த மென்றுமொழியும்
வகைசெய்குரவன் வருகவே
வசையில்சாந்த லிங்கமுனிவன்
வருகவருக வருகவே. (அ)

தந்ததனதாந்த தந்ததனதாந்த தந்ததனதாந்த தனதன.

கங்குல்பகனீங்கு துங்கநிலைதோய்ந்த
கண்கொளுபசாந்தன் வருகவே
கங்கைமதிபாம்பு கொன்றையலர்பூண்ட
கந்தமுடியான்றன் வருகையே

பொங்குசுகமோங்க வங்கமருள்கான்ற
புன்கணறவாஞ்சை பெருகியே
புஞ்சமிகைசான்ற வின்பதுதியீந்த
புந்தியருடேங்கி யிருகையே
தங்குசிரமேந்தி யங்கணறல்பாய்ந்து
சஞ்சிதமிலேந்தல் வருகவே
சந்தநிறைகாஞ்சி யுந்திவலமேய்ந்து
தங்குதளிவேந்தன் வருகவே
தெங்குகடலார்ந்த மங்குலுறநீண்ட
தென்கோணகரான்கண் வருகவே
தெம்புபொலிசாந்த லிங்கவடியாழ்ந்த
சிந்தைவிழியூன்ற வருகவே. (௬)

தாந்ததந்ததன தாந்ததந்ததன தாந்ததந்ததன தந்ததனா.

¶ கோம்பியென்றோர்நிலை நிர்ந்துழன்றணிகொள்
கோங்கரும்பனைய கொங்கைமடவார்
கூர்ங்கணின்குறியில் வாஞ்சைநன்பணியர்
கூண்டிடுஞ்சபையி லொன்றுதலிலா
விம்பிசைந்ததுற வேந்துகின்றவருள்
வேண்டுகின்றபொரு ளென்கவருளால்
மேம்படும்பனுவல் நான்குவிண்டகுரு
வேந்தனெங்கண்முனம் வந்தருள்கவே
சாம்பிணங்கொணினை மாந்துமந்தரருள்
சார்ந்துளங்கொள்பவ சங்கையறவே
தாண்டிநின்றுகரை சேர்ந்திடும்படிசெய்
சான்றமைந்தவன் வந்தருள்கவே

¶ கோம்பி — பச்சோந்தி.

தாம்பிறந்தசெய லோர்ந்துநின்றவுப
சாந்தர் தங்குரவன் வந்தருள்கவே
தாங்குகொங்கிலிசை மாண்புறுந்தளிகொள்
சாந்தலிங்கமுனி வந்தருள்கவே. (௧௦)

வாரானைப்பருவம் முற்றிற்று.



## அம்புலிப் பருவம்.

### சாமம்.

தக்கவஞ் சக்கரச் சங்கத்த மைந்துமைத்
தருவரைத் தாங்குரத்தாற்
றழைகுவல யத்தலரின் மாலையக லத்தளிச்
சங்கமரு கந்திடுதலாற்
புக்கவா காயத்தின் மானிடக் காட்சிகொடு
புதுமைக்கு மேற்படுகையாற்
புணரமா வாசிதின மாதவத் தின்பாற்
பொருந்திப் புலப்படாதாற்
றொக்கவாம் பற்றுணர் விரித்தலா லேற்றமா
துரியக்க ணன்கிடுதலாற்
றொல்லைமறை யாகமாந் தத்துளவி வேகமேற்
றோய்ந்தவிர்ந் திடுதன்மையா
லக்கநிகர் பேரைமுனி யொக்குமுனை யையுறு
தம்புலீ யாடவாவே
யரசேந்து பொங்கரிடம் வரசாந்த லிங்கனுட
னம்புலீ யாடவாவே (௧)

## தலைவன் பகுதி

(பதப்பொருள்) தக்க - தகுதியமைந்த, அஞ்சக்கரச் சங்கத்து - பஞ்சாட்சர நாதமுழக்கமமைந்த சொற்பிரபஞ்சத்தைக்கண்டு, அமைந்து - நிலைபெற்று, உமைத் தருவரை - அம்பிகை பாகரை, தாங்கு - தரித்துள்ள, உரத்தால் - மார்பும் ஞானமும் பொருந்திய தாலும், தழை - செழிப்பமைந்த, குவலயத்து அலரின் - பூமியிலுள்ளாரது பழிப்பையுண்டாக்கும், மாலை - மயக்கத்தை, அகல் - விலகும்படி, தளி - ஒதுக்கி, சங்கமர் - திருக்கூட்டத்தினர், உகந்திடுதலால் - மகிழ்ந்து விரும்புதலாலும், புக்கவா - புகுந்துள்ளதான, காயத்தில் - சரீரத்தில், மானிடக் காட்சிகொடு - மனிதத் தோற்றத்தை மேற்காட்டி, புதுமைக்கு - அசாதாரணமான தெய்வீக அற்புதங்களைக் காட்டற்கு, மேற்படுகையால் - உன்னதமடைகையாலும், புணர - இசையும்படியாக, மா - பெருமையுடைய, வாசி - பிராணவாயுவை, தின - உண்ணுமாறு, மாதவத்தின்பால் - மகிமையுடைய தவத்தினிடத்து, பொருந்தி - இலயித்து, புலப்படாதால் - பஞ்சேந்திரியங்களிற் சாராமையாலும், தொக்கு - அந்ப வஸ்துகளை, அவாம் - விரும்பி, பற்று - ஊன்றிப் பிடிக்கும், உணர்வு - அஞ்ஞானத்தை, இரித்தலால் - நீக்குதலாலும், எற்ற - மேலான, மா - பெரிதான, துரியக்கண் - துரிய நிலையில், நன்கு - நன்மைபொருந்த, இடுதலால் - வைத்தலாலும், தொல்லை - பழமையாகிய, மறையாகமம் - வேதாகமங்களின், அந்தத்து - முடியில், உளவிவேகம் - சத்தியமயமான உணர்ச்சியின், மேல் - மேலாக, தோய்ந்து - கலந்து, அவிர்ந்திடு தன்மையால் - பிரகாசிக்கும் பிரமாநுபூதி யிலக்கியத்தாலும்; தலைவனுக்கும்:

## சந்திரன் பகுதி

(பதப்பொருள்) தக்க - பகைவரை வெல்லத்தகுந்த, அம் - அழகிய, சக்கரசங்கு அத்தம் - சக்கரத்தையும் சங்கத்தையும் தாங்கிய கைகளிசைந்த, மைந்த - வலியுடைய, மை - மேகம்போன்ற, தருவரை - திருமேனியுடைய திருமாலை, தாங்கு - எந்தியுள்ள, உரத்

தால் - ஊக்கத்தாலும், தழை - இலைகளோடுகூடிய, குவலயத்து அலரின் மாலை-குவளைப் பூவாலாகிய பிணையலையணிந்த, அகலத்து - மார்பின்கண், அளிச்சங்கம் - வண்டுக்கூட்டங்கள், அருகு - சமீபித்து ஆர்ந்திடுதலால் - பொருந்தி நீங்காதிருத்தலாலும், புக்க - போந்துள்ள, ஆகாயத்தில் - மேல்வெளியின்கண், மானிடக் காட்சி கொடு - மானையுள்ளமைத்த அலங்காரத்தைக் கொண்டு, புதுமைக்கு - இடையிடையே தோன்றுகின்ற மேகமண்டலத்திற்கும், மேற்படுதலால் - உயர்ந்திருத்தலாலும், புணர் - சம்பந்தமிக்க, அமாவாசி தினம் - அமாவாசை நாளில், ஆதவத்தின்பால் - சூரிய மண்டலத்தில், பொருந்தி - பூரணசம்பந்தம்பெற்று, புலப்படாதால் - தன் மண்டலத்தில் முற்றும் காணாது போதலாலும், தொக்க - கூட்டமாகிய, ஆம்பல் துணர் - குமுத மலர்களை, விரித்தலால் - மலரச் செய்தலாலும், எற்ற - அவற்றிலமைந்த, மாதுரியக்கள் - இனிமையாகிய தேனை, நன்கு - மிகுதியாக, இடுதலால் - (வண்டுகளுண்ணக்) கொடுத்தலாலும், தொல்லை - தொந்தரைகளை, மறை - ஒளித்துள்ள, ஆகம் - கலைவடிவத்தை, மாந்து - உண்ணுகின்ற, அத்து - சிவந்த நிறமும் வெப்பமுமுள்ள சூரியனது, உள் - அகத்திலடைந்த, அவிவு - புழுக்கம், எக - நீங்க, மேல் - எதிர்காலத்தில், தோய்ந்தவிர்ந்திடு திறத்தால் - எப்பொருள்களுடனும் கலந்து விளங்குந் தகுதியாலும்; சந்திரனுக்கும் ஒத்ததென்க.

வளர்பட்ச மிசையத்த மனமுற்று போழ்தூக
 மலங்குவித் தேதாழ்கையால்
மருவுமா சாரியிற் றுரையின் பாற்புந்தி
 மாண்பால கன்பெறுகையால்
வளமுற்ற கருநாட தேயநன் காவலின்மெய்
 வாய்த்துறவின் மானிடர்த்தோய்
வானுங்கு மாரதே வன்னுத்த மாங்கமிசை
 வாய்கவிகை யேற்றிடுதலால்

இளமைக்க ணலங்கொ ளங்கந் தரத்திடை
யிலங்கமிசை பதிவிரதயா
ரிருபத்தி யெழுவரைப் புன்னியதி யவர்பேரை
யிசையநாட் டேற்றிடுகையா
லளவற்ற சாந்தமிகை யோனுனையொவ் வாதிரா
னம்புலீ யாடவாவே
யரசேந்து பொங்கரிடம் வரசாந்த லிங்கனுட
னம்புலீ யாடவாவே. (உ)

## தலைவன் பகுதி

(பதப்பொருள்) வளர் - பெருக்கமாகிய, பட்சம் - அன்பு, இசைய - பொருந்த, தம் மனம் - தமது மனமானது, முற்று போழ்து - இலயமடைந்த காலத்தில், உக மலம் - மலங்கள் சிந்தும் படி, குவித்தே - இதயமொன்றுபட்டுச் சமாதியின்கண், தாழ்கை யால், - ஆழ்ந்தமைதலாலும், மரு - வாசனையுடன், உ - இரண்டா கிய, மா - பெரிய, சாரி - இடசாரி வலசாரியாகிய இடை பிங்கலை கள், இல் - இல்லாத, தாரையின்பால் - சுழிமுனை நாடியின்பத்தால், புந்திமாண்பால் அகன் பெறுதலால் - சுத்த சத்துவமய மகிமை வாய்ந்த அமுதபானஞ் செய்து அதனுட் புகுந்திசையும் தன்மை பெறுதலாலும், வளமுற்ற - செழிப்பமைந்த, கருநாடதேயம் - கன் னட நாட்டினது, நன் - நல்ல, காவல் - அரசத்தன்மை, இல் - இல்லாத, மெய்வாய் - உண்மையறிவு வாய்க்கப்பெற்ற, துறவில் - நிராசையால், மானிடர் - (மானுக்கிடமானவர் அல்லது) அம்பிகையையிடப்பாகத் தமைத்த சிவபெருமானடியில், தோய்வானும் - அடையப்பெறுபவ ராகிய, குமாரதேவன் - குமாரதேவ சுவாமிகள், உத்தமாங்கமிசை - சிரசின்மீது, வாய் - பொருந்தும்படி, கவி - மணி முடிக்கு மேலான தென்று கொள்ளச் சூட்டிய, கை - திருக்கரத்தை, எற்றிடுதலால் - பொருந்தக் கொண்டுள்ளதாலும், இளமைக்கண் - பாலப் பருவத்தி லேயே, அம் கொள் - அழகு கொண்ட, கந்தரத்திடை - கழுத்தி

ளிடத்து, இலங்க - நீலமணிபோன்று பிரகாசிக்க, ஆலம் - விடத்தை, மிசை - உண்டு நிறுத்திய, பதி - சிவபெருமானை வழிபடும், விரதம் - நோன்பை, ஆர் - பொருந்தி, இரு - பெரிய, பத்தி - அன்பானது, எழும் - மேன்மேலும் முறுகவளர்க்கும் தெய்வீகத்தன்மை வாய்ந்த, வரைப்பு - புண்ணிய தலமானது, யதி - முனிவர்களான, அவர்பேரை - அவர்கட்கே மிக்குரித்தமைந்த பேரையம்பதி என்ற, இசைய - பொருந்த, நாட்டு ஏற்றிடுகையால் - நிலையாகப் பொருந்தியமை வதாலும்; தலைவனுக்கும்:

## சந்திரன் பகுதி

(பதப்பொருள்) வளர்பட்சமிசை - வளர்பிறைப் பருவத்தில், அத்தமனமுற்றுபோழ்து - சூரியாஸ்தமயத்தின்பின், கமலம் - தாமரை மலரானது, குவித்தே - இதழ்முகிழ்ப்பிசைந்து, தாழ்கை யால் - குனிவதாலும், மருவும் - பொருந்திய, ஆசாரி - வியாழபகவா னது, இல் - மனைவியாகிய, தாரையின்பால் - தாரையென்னும் பெயருடையாளிடத்து, புந்தி - புதனாகிய, மாண் - புலமை மாட்சி யிற் சிறந்த, மகன் பெறுதலால் - புதல்வனைப் பெற்றதாலும், வள முற்ற - அழகு நிறைந்த, கருகாடது - கருப்பமமைக்கும் நாட்டம், எய - பொருந்தும்படி, நன்கு - நன்றான, ஆவலின் - இச்சையினிடத்து, மெய்வாய்த்து - உண்மை சித்திக்கச்செய்து, உறவு இல் - சுற்றமுடன் கூடிய இல்லறத்தில், மானிடர் - மனிதர்களை, தோய் - சம்பந்தப்படுத் தும், மாரதேவன் - மன்மதனுடைய, உத் - மேலான, தமாங்கமிசை - அழகிய கரிய சரீரத்தின்மீது, வான் ஆங்குவாய் கவிகை ஏற்றிடுத லால் - ஆகாயமாகிய அவ்விடத்தில் சந்திரிகை விரிந்த குடையாக நின்று பெருமையையளித்தலாலும், இள - மென்மையிசைந்த, மைக் கண் - அஞ்சனந் தீட்டிய கண்கள், ஆலம் - விடமொத்தன, கொள் - தாம் வசித்தலைக்கொண்ட, அங்கு - அவ்விடத்தைப் போன்றே, இடை - அவர்களது இடையும், அந்தரம் - ஆகாயம்போல்வன, இடை யில் - இடைபோன்ற ஆகாயத்திலே, அங்கம் இசை - தமது சரீரத் தைச் செலுத்தும், பதிவிரதமார் - பதிவிரதா தன்மம் வாய்ந்த,

இருபத்தியெழுவரை-இருபத்தேழு நட்சத்திரங்களை, புல் - தழுவும், நியதி - முறைமையை, அவர் - அவ்வவர்களது, பேரை - அச்சுவனி முதல் ரேவதியீறாகிய நாமத்தை, இசைய - பொருந்தும்படி, அந்நாள் - அவ்வந்நாட்களையும், தேற்றிடுகையால் - உலகுள்ளோரறியத் தெளிவித்தலாலும்; சந்திரனுக்கும் ஒத்ததென்க.

பகருமா சிப்பூ ரணந்தொறு மகத்துவப்
பார்விழாக் கண்டமைதலாற்
பதிவான மேலைச்சி தம்பர வியற்கொங்கை
பதிவியன் பெட்டிடுதலால்
சகமிசை குணக்குன்ற மாயிர வலர்க்குதவு
தாரகைப் பதியாதலாற்
றனவனெ னப்பெயர்த் தன்மையின்வ ழிப்பட்ட
சத்தமாத் திரையாதலாற்
சுகமிசையு மந்தரங் கத்தார வாரமேற்
றேயவுந் தியையாக்கலாற்
சூழணங் குறுமகப் புலவர்கொள் வானின்
றுதித்தமிழ் தழைத்திடுகையா
லகமிசையு முனையொப்பன் முகமனறி கிலன்மெய்ச்சொ
லம்புலீ யாடவாவே
யரசேந்து பொங்கரிடம் வரசாந்த லிங்கனுட
னம்புலீ யாடவாவே (௩)

## தலைவன் பகுதி

(பதப்பொருள்) பகரும் - துதித்தலையுடைய, மாசிப்பூரணந் தொறும்-மாசி மாதத்திற் பருவந்தோறும் தவறாது வரும், மகத்து-மக நக்ஷத்திரத்தில், உவப்பார் - அன்பர்கள் கண்டு மகிழ்ந்து போற்

றும், விழா - உற்சவ மகிமை, கண்டு - எக்காலத்தும் மாறாது பார்த்து, அமைதலால் - நிலைபெற்றிருப்பதாலும், பதிவான - அள வற்ற மகிமாதிசயங்களையுடையதெனத் தேவர் முனிவராதியருள் ளத்தும் அழுந்தியிசைந்துள்ள, மேலச்சிதம்பரம் - (என்ற காரணச் சிறப்புத் திருநாமங்கொண்ட) திருப்பேரூரைத் தனது முகமாகக் கொண்ட, இயற்கொங்கு - மாறாநலங்கொண்டுள்ள கொங்குநாடு, ஐ - அழகிய, பதி - தனது நாடென்று பாவலரும் நாவலரும் சொல்லிப் போற்றும், வியன் - பெருமையை, பெட்டிடுதலால் - விரும்பியதாலும், சக - துணையாயினரை, மிசை - மேனிலையிற் சேர்த்தும், குணக்குன்றமாய் - சுத்த சத்துவமயமான சோதிமலை யாய், இரவலர்க்கு - எழையன்பர்களுக்கு, உதவு - இரங்கியருள் புரியும், உதாரகைப் பதியாதலால் - வள்ளற்றன்மையுடைய திருக் கரங்களைப் படைத்த முதல்வனாதலினாலும், தான் - தானே, அவன் - இறைவன், எனப்பெயர்த்து - என்பதாக வேற்றுமைப் படுத்தியுரைத்து, அன்மையின் வழிப்பட்ட - அதுவும் அன்றென்று சொல்லப்பட்ட, சத்த மாத்திரையாதலால் - ஓசையளவிலொடுங்குந் தன்மை பெறுதலாலும், சுகமிசையும் - இன்பமயமாகும், அந்த ரங்கத்து - உள்ளறிவினைக்கொண்டு, ஆர - உண்ணக்கூடிய, வாரம் - உரிமையானது, மேல் - மேலும் மேலும், தோய - திளைக்கும்படி, உந்தியை - அவிரோதவுந்திநூலை, யாக்கலால் - செய்தருளியதாலும், சூழ் - நெருங்கிய, அணங்குறும் - துன்பம் பொருந்திய, அகப் புலவர் - உள்ளத்தையுடைய கவிஞர்கள், கொள்வான் - கைக் கொண்டு தோத்திரஞ்செய்து பத்திச்சிறப்பமையுமாறு, இன் - இனி மையான, துதித் தமிழ் - தெய்வச் சிறப்பும் தங்குறைகளும் கலந் துள்ள திருப் பாடல்களும், தழைத்திடுகையால் - திருவுள்ளங் கனிந்து திருவாய் மலர்ந்தருள்கையாலும்; தலைவனுக்கும்:

## சந்திரன் பகுதி

(பதப்பொருள்) பகரும்-வேதாகமங்களை யுணர்ந்தோர்களாற் சொல்லப்படும், ஆசி - வாழ்த்துக்களைக்கொண்டவைவாய், பூரணந்

தோறும் - பௌர்ணமிதோறும், மகத்துவம் - மகிமை மிகுந்துள்ளனவான, பார்விழா - உலகெவற்றினும் நடைபெறும் திருவிழாக்களையெல்லாம், கண்டமைதலால் - தெரிசனம் புரிந்து குளிர்ந்து விளங்குதலாலும், வானப்பதிமேல் - ஆகாயமீதமையும் மண்டலத்துள்ள, சிதம் - நக்ஷத்திரங்களது, பரவு இயல் - புடை பரந்துள்ள தன்மை மாறாத, கொங்கை - தனபாரங்களில், பதிவி - மார்பிசையத் தழுவுகின்ற, அன்பு - காதலின் பெருக்கம், எட்டிடுதலால் - நெருங்குதலாலும், சகமிசை - பூமியின்மீதுள்ள, குணக்குன்றமாய் - கீழ்த்திசையிலுள்ள உதயகிரியிற்றோன்றி, இரவலர்க்குதவு - இராக்கால மலர்களுக்கு உதவி புரியும், தாரகைப் பதியாதலால் - உடுபதியாகிய தன்மையாலும், தானவனெனும் பெயர்த்தன்மையின் - தானவனென்று சொல்லும் நாமத்தன்மைபோல, வழிப்பட்ட - இராவழிக்கொண்டு சென்றும், சத்த மாத்திரையாதலால் - யாவருக்கும் தீங்கிழைக்காது ஓசைமாத்திரமாயிசைதலாலும், சுகமிசையும் - நீர்வடிவாகிய, அம் - அழகிய, தரங்கத்து - அலைப்பெருக்காலுண்டாகும், ஆரவாரம் - பேரிரைச்சல், மேல்தோய - புறத்திற் பொருத்துமாறு, உந்தியை - சமுத்திரத்தை, ஆக்கலால் - செய்யுந்தன்மையாலும், சூழ் - சுற்றியுள்ள, அணங்குறும் - தெய்வப் பெண்களைப் பொருந்துகின்ற, மகப்புலவர் - வேள்விச் சிறப்பாற் போகாநுபவவுணர்ச்சியமையும் வானோர்கள், கொள்வான் - பெற்றுண்ணும்படி, உதித்துநின்று - உதயமாகி வந்து, அமிழ்து அழைத்திடுகையால் - அமுதத்தைக் கூவியழைத்திடுகையாலும்; சந்திரனுக்கும் ஒத்ததென்க.

பேதம்.

திதிபின்று நாளைக்கோர் திதியென்று புவியுளோர்
 செப்பிடுதல் கேட்டுநாணாய்
சிர்த்திபெனவேகொண்டு வார்த்தியிற் றிரிகுவாய்
 சேரமா வாசையன்று

மதியின் றெனச்சொல்வார் கன்கான வந்தென்னை
மதியென்று தோற்றிநிற்பாய்
மற்றிவன் பந்தமோட் சந்தருமொர் வள்ளலை
மனத்தக மமைத்துநாளும்

கதியின்று மென்றுநின் கழலென்று மற்றதே
கரியென்று மன்புசெய்வான்
கதிர்ப்புரண மமையினீ கடல்கலக் குவையிவன்
கண்டோர்க்கு நிலைமைதருவோன்

அதிநம்பி னிற்கூவ லருளாகு மருளுரு
தம்புலீ யாடவாவே
யரசேந்து பொங்கரிடம் வரசாந்த லிங்கனுட
னம்புலீ யாடவாவே (சு)

குருவினது பத்தினி தனைக்கூடி யாடியொர்
குமாரனைத் தந்தனையலாற்
குளிர்தார கைப்பெயர்த் தாரகைப் பிடிகொண்ட
கொள்கையினி மேலுமொழியாய்

மருவிவன் கற்புருவ ஞானும்பி கைக்கொடிநன்
மணவாள னென்னநின்று
மயற்றருவை வெட்டுகுண வாளனுப் துறவறமெய்
வாஞ்சித்த வளையும்விட்டான்

சொருபத்தி லொன்றியற் கைச்சுகம் பெறுமறிவு
தோய்ந்தநிலை யானொர்நிலையுந்
தோன்று வுடம்புறு முனைக்கூவு மேன்மையென்
சொல்லுவே னல்லுணர்வின

லருமைத் திருப்பேரை முனியுவப் புறவிரைந்
தம்புலீ யாடவாவே
யரசேந்து பொங்கரிடம் வரசாந்த லிங்கனுட
னம்புலீ யாடவாவே. (ரு)

வேறு — தானம்.

குழைத்தமாயை கன்மமலக்
கூட்டுட்கிடந்துண் டுடுத்தாசைக்
குழிவிழ்ந்துழல்வார் கதைபேசிக்
குமையுமுலகர் தம்மகத்திற்
பிழைத்தபிழைமுற் றும்பொறுத்துப்
பெரிதுதான்பெற் றின்பமைந்த
பேறுபொருத்தும் படியடையும்
பெரியோன்வானின் மதியெனும்பேர்
தழைத்தவுனக்குண் டாங்களங்கந்
தவிர்த்தெல்லோர்க்குந் தெரியவைத்துச்
சார்ந்தார்குறைமுற் றொழிக்கவெண்ணுஞ்
சலதிக்கருணைப் பெருக்கிலுனை
யழைத்ததாகும் வரங்கொடுநீ
யாடவாரா யம்புலியே
யணிப்பேரூர்ச்சாந் தலிங்கனுட
னாடவாரா யம்புலியே (சா)

நீதித்தவக்கன் னடநாட்டி
ளிருபன்றனைப்பன் னுட்பணிக்கண்
ணிறுத்திச்சோதித் தாண்டுகல்வி
நிறைவோன்றனைக்கொன் டவனணைகாற்

போதித்திவனை நின்சுதனைப்
புரிநீயெனக்குப் போதுமெனப்
புகன்றான்வலிந்து கூவுதவம்
பொலிபாக்கியநிற் கடுத்ததென்னே
பேதித்துனக்குக் கலைகொடுத்துப்
பிடுங்கிமானங் கெடத்துரத்தும்
பிள்ளைவிளையாட் டினனன்று
பெருவாழ்வனைத்துந் தத்தமிடும்
ஆதித்தன்காண் கூர்ந்துணர்வற்
றுடவாரா யம்புலியே
யணிப்பேரூர்ச்சாந் தலிங்கனுட
னுடவாரா யம்புலியே. (எ)

தண்டம்.

தனதனதான தாந்தனந்தந்தன தானதந்தனன.

தனதுயர்பேர்மான் மாய்ந்தறும்பன்பிடை
சாரா னென்கினுமா
தவமெளிதாமோ வாஞ்சைதங்கும்பணி
தானே முன்செயுமே
யனகனுலோர் வான்புகுந்தொண்டர்க
ளாராய் கின்றிலரா
யவிர்துறவூடே யாம்பொருந்தும்படி
யாவே சம்புகல்வார்
இனமனையாளோ டோங்கிடுந்தஞ்செய
லேனோர் கின்றிலரோ
வெனுநினைவார்போழ் தாண்டவன்சங்கரி
யேபோ னுந்திகழ்வான்

மனதிடைகூர்*வா ளேந்தும்வன்பொன்றுமுன்
வாவா வம்புலியே
மகிமைகெடாதே சாந்தலிங்கன்புடை
வாவா வம்புலியே. (அ)

தந்தனந்தந்தன தாந்தனந்தானன தானதந்தனனா.

அங்||கலிங்கம்பல பூண்சுமந்தேதரு
வார்வாழ் வென்பதினா
டண்டரென்றென்றினர் போன்றுதன்சீரிக
லாவார் தம்புடையே
பொங்கமிஞ்சும்படி தாம்பகர்ந்தார்கலி
போல்வாய் விண்டிரையோர்
புந்தியென்னும்படை யான்றனதாவல்கள்
பூரா வுந்தரவே
கங்கணங்கொண்டிறை பாங்கினின்றுன்விறல்
காணா ரிங்கெவரே
கண்டிதங்கண்டுறன் மாண்பதன்றுனுடல்
கானா டாமுனம்போன்
மங்கலென்புந்திமெய் சான்றுறும்பேரையில்
வாவா வம்புலியே
மங்களம்பொங்குவை சாந்தலிங்கேசன்முன்
வாவா வம்புலியே. (கூ)

தாந்ததந்தன தாந்ததந்தன தானதந்தனனா.

ஆந்தவம்பொலி வேந்தனிங்கிவ னுளாநின்றிடுசீ
ரார்ந்தவன்சின மோங்கமங்கள வாருரின்புடையே

---

|| கலிங்கம் — துணி.

*வாளேந்தல்—வீரபத்திரராகத் தோன்றுதல்.

போந்தவெந்திர மாங்குநின்றது போராலன்றறிவாய்
பூண்டதொண்டடி யான்றெரிந்திடு போழ்தாமுன்பரிவாய்
வாய்ந்ததன்பெய ரோங்கநின்றவன் மாணூர்சிங்கையுளாம்
வான்பெருந்தவ மூண்டெழுந்திடின் மாய்வாயிங்கையகோ
மாந்தரின்புறு மேந்தல்கண்கண்முன் வாவாவம்புலியே
மாண்பொலிந்துயர் சாந்தலிங்கன்முன் வாவாவம்புலியே.

அம்புலிப் பருவம் முற்றிற்று.

## சிற்றிற் பருவம்.

வரமேவிசையப் பெற்றமரா
வதிபாதலமண் புக்கவற்றுள்
வாழ்வார்களைத்தாழ் வாராக்கி
மகிழுங்கொடியோர் வாய்ந்ததிரி
புரமேவிசைய நகைகாட்டிப்
புகைபோலொழித்துச் சிட்டர்களைப்
புரக்குங்கருணைப் பெருங்கடலைப்
புந்தியமைத்தல் போதாதென்
றுரமேவிசையுங் கரமீதி
லுறுவித்தருச்சித் தேத்திடுமன்
புடையாய்சிவ கருணையரு
ளுருவாய்த்தவப்பக் குவத்தொண்டர்
சிரமேவிசையுந் திருத்தாளாற்
சிறியேஞ்சிற்றிற் சிதையேலே
திருப்பேரூர்ச்சாந் தலிங்ககுரு
தேவாசிற்றிற் சிதையேலே. (க)

ஓங்குதவமார் சூரனுக்காங்
குசனன்புகன்ற விருணூலோ
வும்பர்வேந்தன் றனக்குப்பொன்
ஞேதுங்காம மருணூலோ

தாங்குதலைபத் தினன்வேனன்
சாற்றுமறந்திர் மகநாலோ
சமயப்பிணக்கு மதப்பிணக்குந்
தழைத்திராகந் துவேசமிக

வேங்குமயக்க வுணர்ச்சியுளா
ரிபற்றுநூலாங் குப்பைகளோ
வேற்றபலிப்பேய்க் கோயில்களோ
வென்றுன்னுளத்திற் கொளவேண்டாந்

திங்குபயவா வரம்பினதியாஞ்
செய்தசிற்றிற் சிதையேலே
திருப்பேரூர்ச்சாந் தலிங்ககுரு
தேவாசிற்றிற் சிதையேலே. (உ)

அலைக்குநிகரா யொருகணமு
மமையாதென்றும் புறவுலகத்
தாட்டியுழக்கு மாயைகன்ம
மடிவேரறக்கெட் டழிந்திடவே

கலைக்குமுயர்க லாந்தநிலை
கண்டுதெளிந்து கரைந்துகரை
கடந்தபரமா னந்தவியற்
கடலுண்முழுகிக் கரணமற்று

நிலைக்கும்பெரியோர்க் கோர்துணையா
நிமலப்பரிபூ ரணஞான
நிறைவாருனது திருத்தாட்கு
நிகழைந்தமைமாத் திரைபெறுமன்

சிலைக்குநிகரா மதனலெஞ்
சிற்றிற்சிதையேல் சிதையேலே
திருப்பேரூர்ச்சாந் தலிங்ககுரு
தேவாசிற்றிற் சிதையேலே. (௩)

முந்தையிசையும் பலபிறப்பின்
முதுமாதவமிக் கியற்றியதான்
முற்றும்பயனுத் திரளுனைக்கான்
முளையாப்பெற்றுக் களிக்குமிசைத்

தந்தைதாயர் மடித்தலமோ
சலசமலர்நேர் கரதலமோ
சயிலமிணையாம் புயப்பொருப்போ
தழைத்தகருணை விழித்துணையோ

விந்தையிசையுந் தலங்களுக்கு
மேவும்வழியோ படித்தலமோ
வியனார்கோயிற் சுற்றிடமோ
விளையாட்டயரம் மிடமிதுதான்

சிந்தைகனிந்துன் பத்திமைசால்
சிறியேஞ்சிற்றிற் சிதையேலே
திருப்பேரூர்ச்சாந் தலிங்ககுரு
தேவாசிற்றிற் சிதையேலே. (௪)

எட்டியமையும் பிறவியினி
யெட்டாதோடு மென்றெடுத்துள்
ளின்பமிகவே பாலூட்டி
யெழிலார்திருமே னியைப்பரிவாற்
கொட்டியமையுந் துணைவிழிகள்
கொட்டாதுவக்க விருந்தூட்டிக்
கோலம்பொலிவா யுபதேசக்
கும்பல்செவிதேக் கிடவூட்டிக்
கட்டியமையுஞ் செழுந்தேனே
கட்டாதவிழுஞ் சிந்தைமலர்க்
காதற்கொழுந்தே யெனுமன்னை
காணின்மனங்கன் றுதல்போன்றெந்
திட்டியமைந்துன் றாள்கன்றுஞ்
சிறியேஞ்சிற்றிற் சிதையேலே
திருப்பேரூர்ச்சாந் தலிங்ககுரு
தேவாசிற்றிற் சிதையேலே. (ரு)

வேறு.

புத்தித் தலத்துறுங் காரியம தாய்வெளிப்
போந்துவினை யேந்துகின்ற
புலனோ டிசைந்திடும் போக்கியப் பற்றறப்
போக்கியின் பாக்குமின்பப்
பத்தித் துறைக்கனின் றமலமெஞ் ஞானமுறு
பட்டினத் தடிகண்மொழிபோற்
பாவமலி பொல்லா வெனைக்கொன்று போடும்
பதத்தினிற் பூசைசெபமும்

சுத்தித் திறக்கோயி னியமங்கள் பலவகைத்
தோத்திரத் திரள்கண்முதலாந்
தூயசற் கன்மங்க ளெல்லாமு டித்திடத்
துணைநின்று கூட்டியிணைநிர்
சித்திமுத் தித்திற மளித்தருள்க முன்னமெஞ்
சிற்றிற் சிதைத்திடேலே
சிவமேந்து மங்கைபெறு தவசாந்த லிங்ககுரு
சிற்றிற் சிதைத்திடேலே. (சு)

தடம்பாயு மிருவிழிகள் கண்டுகளி தேங்காத்
தழுதழுத் தன்பிலேத்தத்
தலைமீ தமைத்தகைத் துணையோடு புளகந்
தழைத்துநுண் டுளியரும்ப
விடம்பாய் தருங்கால கண்டனைமெ யன்பருளம்
விரிதாள கண்டனைமுனோர்
மெய்த்தவக் கடலா முனக்கெனறி யாமையை
விரித்தோத வஞ்சுகின்றேன்
உடம்பா ரழிந்திடினு ளுயிராரு மழிவரெனு
முத்தமர்சொ லாங்கட்டுரை
யுண்மையென நம்பலிலென் வெண்மையுறு நெஞ்சகத்
துள்ளூறி யள்ளூறிடுந்
திடம்பா யுணர்ச்சிதர வேண்டிவழி படுமடிமை
சிற்றிற் சிதைத்திடேலே
சிவமேந்து மங்கைபெறு தவசாந்த லிங்ககுரு
சிற்றிற் சிதைத்திடேலே. (எ)

தத்தன தாந்ததந்ததன தத்தத்தனதானு.

திக்கினம் வான்பொருந்தமரர் சித்தக்கனிவோடே
செப்பிசை வாய்ந்திடும்பலபல் சித்தித்திறலோனே
சக்கிடை தேங்கிடுங்கருணை தத்திப்பரிவாலே
சற்குண மோங்குதொண்டர்கண்மெய் தத்தத்தினிலாள்வான்
மெய்க்குரு வாந்திறங்குலவி விற்பத்திகொண்மேலோர்
மெச்சிய நான்கமைந்தமறை மிக்கற்புதநீர்தோய்
செய்க்கிடை யூன்றிடுந்தயவ சிற்றிற் சிதையேலே
சிற்பர சாந்தலிங்கமுனி சிற்றிற்சிதையேலே. (அ)

தாந்ததந்ததன தத்ததனதானு.

ஈன்றதந்தையனை யைத்துறவினூடே
யேய்ந்ததொண்டர்களும் விட்டிடுகைதிதே
யேன்றநன்பணியி யற்றன்முறையாம்வா
நின்றபந்தமரு வுற்றுளருளாய்வா
யான்றடங்கவுயி ரைத்தருமனோர்தா
மான்கொணம்பனுமை யப்பனனையாமோர்
சான்றறைந்தகுரு சிற்றிலழியேலே
சாந்தலிங்கமுனி சிற்றிலழியேலே. (கூ)

தந்தநனதாந்த தந்ததனதாந்த தத்தத்தனதானு.

கொன்றுபிணவூன்க ளுண்டுளிறுமாந்த கொச்சைக்குணமேயோர்
கும்பலிடைதோய்ந்து துன்பமிகவேங்கு குற்றத்தணையாதே
நன்றுபொலிசாந்த மிஞ்சுகுணமான்பர் நட்புத்தவிராதே
நம்பனருள்வேண்டி யன்புநிறைவேந்தி நட்டத்தொலிமாரு

மன்றுகணநீங்க லின்றிமிகமாந்த வைப்புக்கதிசேர்வான்
மங்களமதோங்கு முன்கணருண்மாந்த வைத்துக்கனிவாலே
சென்றுகதியூன்ற நன்றுதமியேன்கொள் சிற்றிற்சிதையேலே
தெம்புநிறைசாந்த லிங்கருவேந்த சிற்றிற்சிதையேலே (கo)

சிற்றிற்பருவம் முற்றிற்று.

---

## சிறுபறைப் பருவம்.

---

* அவிதா விடும்பெருக வாத்தாவி மந்தரத்
தாழிகடை போதிலதுதா
† னவிதா விடும்படி விடங்கான் றிடுங்கா
லயர்ந்தும்ப ‡ ரவிதாவிடக்
கவிதா விடுஞ்சுந் தரன்போந்து நல்கக்
களந்தாவி டும்பரமனைக்
கரத்தினு முரத்தினுமெய் யிதயாம் பரத்தினுங்
கண்டுகண் டுண்மகிழ்ந்து
புவிதா விடும்பைப் புலக்கண மலக்கணம்
போகவரு போகஞானம்
பொலிவுற்ற நீமிகவுண் மெலிவுற்ற யாமெலாம்
போதமிக வேமுழங்கச்
செவிதா விடும்பல்குப தேசமாப் பேரையிடை
சிறுபறை முழக்கியருளே
திங்களிணை முகசாந்த லிங்கருரு பரவேந்த
சிறுபறை முழக்கியருளே. (க)

---

* அவி — தேவருணவு. † அவிதாவு — அழியுமிடம்.
‡ அவிதா — ஆபத்தில் உதவிவேண்டி முறையிட்டுக் கூறுதல்.

ஆர்கலி முழக்குமலை சேர்புனன் மடுத்தின்ப
மார்புயன் முழக்கையிந்நா
ளவனிபெறு மானிடர்தம் வாயின்மழை யின்றென்னு
மதிமுழக் காக்கியுமிசை

நீர்கலித் தெழுமுழக் கம்பொலி மடுப்பண்ணை
நிறைகிடங் கேரியாதி
நேர்கண்க ளிடைதுன்ப நீர்கலித் திடலான
நெடுமுழக் காக்கியுமிசைச்

சீர்கலித் திடுமற மறந்துளங் கவர்மறச்
செய்கையாற் கைவலியுளோர்
செப்புமிறு மாப்பார் முழக்கமுங் குன்றினோர்
செய்யமூகை யாமுழக்குஞ்

சேர்கலி முழக்கறப் பார்மருவு பேரையிற்
சிறுபறை முழக்கியருளே
திங்களிணை முகசாந்த லிங்ககுரு பரவேந்த
சிறுபறை முழக்கியருளே. (உ)

மறமாய மங்கையர்கள் கண்டத் தமைந்துசெவி
வாய்மடுக் குங்கண்டமாய்
மயில்காடை புறவுகுயில் கிரமா தியவெண்புள்
வகையா முழக்கமருவும்

புறமாய பிண்டத் தமைந்தசுக போகவறு
போகமிசை போகவிட்டுப்
போந்தநெய் தற்பறை முழக்காக்கு முலகியற்
போக்கியுயிர் நோக்கியகலா

நிறமாய மணிவண்டு கடல்யானை குழல்சங்கு
நேர்தும்பி யாழ்பேரிகை
நிறைமேக மணியான தசநாத வநுபூதி
நிலைகண்டு ளகமொன்றவே
திறமாய திருவருட் கண்பெறப் பேரையிற்
சிறுபறை முழக்கியருளே
திங்களிணை முகசாந்த லிங்கசூரு பரவேந்த
சிறுபறை முழக்கியருளே. (௩)

தங்கையண் ணவென்று மன்னன் றடக்கைமார்
தம்பியென் றும்பயந்த
தாய்தந்தை யருமந்த மைந்தவென் றுங்களங்
கனில்வாய்ந்த நாலணைந்த
கொங்கைபெறு நங்கைவாய் வந்தபடி பாடிவன்
கோரணிக் கூத்தாடிடக்
குமரரப் பாவென்று கோவென்று கதறிடக்
கூண்டவர்கள் கூகாவெனச்
சங்கையறு பறைமுழக் குஞ்சுற்ற மாயினோர்
சலமுழக் குறுமுழக்குஞ்
சவமுன்ன வருமோரி நாய்கொடி முழக்கெலாஞ்
சார்தரா துன்பங்கயச்
செங்கையிற் குணில்கொண்டு மங்களப் பேரையிடை
சிறுபறை முழக்கியருளே
திங்களிணை முகசாந்த லிங்கசூரு பரவேந்த
சிறுபறை முழக்கியருளே. (௪)

§ இலம்பக முழக்கிடு முழக்கிடு மளிக்குல
மிசைந்தமட மாதர்மைந்த
ரிலங்குமே கலைமுழக் குஞ்சிலம் பணிகள்கல்
லென்றிடு முழக்கும்வீர
வலம்பகரு மொப்பில்கன் டாமணி முழக்கமும்
மதயானை புரிமுழக்கும்
வாம்பரி கனைத்திடு முழக்கமுந் தேர்த்திரளின்
வாய்த்தவா ழியின்முழக்கும்
நலம்பகரு மாசியின் முழக்குமொலி யுங்காஞ்சி
நதியாடு வோர்மனைஞ்சால்
நாநாவி தம்பொலி முழக்குமார் கலிநாண
நாளுமிசை தருபேரையிற்
சிலம்பகத் திரளெதிர் சிலம்பிடச் செங்கைகொடு
சிறுபறை முழக்கியருளே
திங்களிணை முகசாந்த லிங்ககுரு பரவேந்த
சிறுபறை முழக்கியருளே. (ரு)

**வேறு.**

சத்தமதனி லுலகமெலாஞ் சாருமடங்கு மெனப்பெரியோர்
சாற்றுந்தகையா லலம்பொருந்து சாரவொலிகண் மிகத்தழைத்துப்
பைத்தவிடம்பாம் பனையர்களைப் பருஉக்கைமதத்தின் களிறேபோற்
பாழிலிறுமாந் திடப்புரியும் பாவகன்ம சத்திகளின்
சித்தமலைந்து குபீரென்னச் செந்நீர்பெருக்கிச் சோர்ந்தடங்கச்
சிவகருணை முதலறங்கள் செகமேலெழுந்து மிகமுழங்க
முத்தர்புகழ்சால் பேரூரின் முழக்கியருளாய் சிறுபறையே
முதல்வாசாந்த லிங்கமுனி முழக்கியருளாய் சிறுபறையே. (சா)

---

§ இலம்பகம் உழக்கிடும் எனப் பிரிக்க.

நாதகண்டா மணிமுழக்கு நாடும்வேதப் பெருமுழக்கு
நால்வர்திருப்பாட் டிசைமுழக்கு நவிலர்ச்சனைவாழ்த்
[திசைமுழக்கும்
போதவருண கிரிமுழங்கிப் பொழியுஞ்சந்தப் பெருமுழக்கும்
புகல்வார்தாளத் திரண்முழக்கும் புனைகாற் சதங்கை நடமுழக்கும்
ஓதமுழக்கிற் பொலிகோயி லுள்வாழ்பட்டைச் சூரன்பச்சை
யொளிசான்மரக தக்கொடியி னுள்ளங்குளிர்ந்து கருணைபொங்கி
* மோதமமையப் பேரூரின் முழக்கியருளாய் சிறுபறையே
முதல்வாசாந்த லிங்கமுனீ முழக்கியருளாய் சிறுபறையே. (எ)

தனனாதாந்த தந்ததனா தனத்ததனனா தனதனனா.
உதிர்காய்தாங்கு தெங்கினம்வா னுவக்குமிமையோர் முடிமிசைபோ
யுயர்வாயோங்கு பந்தரெனா வுலாக்கமகிழ்வான் முடியசைசீர்
மதியூடோர்ந்து கந்திகள்வா சனைக்குலைகளாம் விசிறியினீண்
மணமேலேந்த நன்கசைகால் மயக்கமிகையார் திரளிளநீர்
நுதியார்¶கூந்த லங்கொளிவா நுடக்கமுணர்போ தரமகளீர்
நுனியாவோர்ந்து ளொஞ்சிடுசீர் நுழைத்தபிறவா நெறியிடையே
முதிர்சீர்சான்ற சுந்தரனே முழக்கியருளாய் சிறுபறையே
முதல்வாசாந்த லிங்கமுனீ முழக்கியருளாய் சிறுபறையே. (அ)

தத்தாதாந்த தந்ததனா தனதனதனத்த தனதானா.
முப்பாலீந்த வன்கனிவாய் மொழிதருகுறட்க ணதின்மேலாய்
முற்றுநான்கும் விண்டதுபோன் முதிர்துதியிசைத்த பெரியோ
மெய்ப்பாலோங்கு மன்பர்சிலோர் விழிவழிபடித்த வறிவாலே [னே
மிக்காராய்ந்து கண்டவெலாம் விகசிதவிளக்க நிலையால்வா
னப்பான்மாந்து மின்புறமா வனையவருளத்தொ விருடானே
யற்றேகாந்த மென்பதிதோ யநுபவவுணர்ச்சி பெறுமாறே
செப்பாவீண்டு மங்களமார் சிறுபறைமுழக்கி யருள்வாயே
சித்தாசாந்த லிங்ககுகா சிறுபறைமுழக்கி யருள்வாயே. (கூ)

---

* மோதம் — களிப்பு. ¶ கூந்தல் — கமுகோலை.

தனத்ததனதன தாந்ததந்தா தனத்ததனதனனு.

சகத்தினிடைதமிழ் வாய்ந்தவின்பார் தலத்தைநிகர்தருசீர்
தனைக்கொள்பதியிலை யாங்கிவண்சீர் தழைத்தபதிகளிலே
யகத்தினிடைதுற வோர்ந்துகண்டா ரளக்கிலுயர்வதுதா
னனைக்குநிகர்சொல வேன்றகொங்கே யதற்குண்மகிமையதா
மிகச்சொலருணல மீந்திடும்பே ரையொப்பதிலையெனவே
விளித்துவகையினி லாண்டிடுஞ்சீர் வெளிப்புலனினிறைவான்
முகத்திலமைதளி வேந்தநன்றாய் முழக்குசிறுபறையே
முதிர்ச்சியருள்பொலி சாந்தலிங்கா முழக்குசிறுபறையே. (௧0)

சிறுபறைப்பருவம் முற்றிற்று.



## சிறுதேர்ப் பருவம்.

---

பொன்றலங் தங்கினர்ம ணின்றலங் தங்கினர்
புகும்பின் றலந்தங்கினர்
போந்திட விமப்பொருப் பேந்திடற் காற்றாது
பொள்ளெனச் சாய்ந்திடுகையால்

நின்றலங் தங்கினர்க ளிங்கினர்க ளெங்கினர்க
ணீங்கினர்க ளென்றெவர்களும்
நெடிதேங்கி யுற்றமணி முடிதாழ்ந்து நின்றதொர்
நிலைக்கரை னுபர்கலசனைக்

கன்றலங் தம்பெறத் தென்றலங் தங்குபொதி
கைப்பா லுறச்சாற்றலும்
கதிகொண்டு குதிகொண்ட நாம்வரைத் தமிழ்சந்த
கந்தந்தி மிர்ந்தவின்பத்

தென்றலந் தேருடைய னின்றலந் தேருடையோர்
சிறுதே ருருட்டியருளே
திருஞான §மீந்தவனி யுருவான சாந்தமுனி
சிறுதே ருருட்டியருளே. (க)

உய்யகத் தேவர்* திரி புரமுற்று நீடுதிரி
‡ புரமுற்று ளோரையடவே
உமைபங்க னூர்தரச் சமைபண்ப தாயுயிர்க்
கொருநண்ப தாகியமையும்
வையகத் தேரினிடை வைகவைத் திடுநன்றி
மறவாம லேத்தியன்பின்
மாறுகி டாதுறுகை மாறுக நாம்புரியும்
வண்ணமெது வென்றெண்ணியே
மெய்யகத் துங்கை யகத்தும்வைத் துளதன்றி
மேன்மேலு மின்போங்கவே
மீதிவரு மானந்த வீதிவரு வானையுள
மேதினியு ளார்காணவே
செய்யகத் தொடுபுறத் தெய்துறப் பேரையிற்
சிறுதே ருருட்டியருளே
திருஞான மீந்தவனி யுருவான சாந்தமுனி
சிறுதே ருருட்டியருளே. (உ)

பார்தரப் படுபிறவி யூர்தரப் பெறலுமது
பாக்கியமி தைப்போக்கியப்
பண்ணவரை நம்பியோ பாதலரை நம்பியோ
பாழ்படுத் தாதுமோட்ச

---

§ மீந்து — மிகுந்து. * திரிபு — செல்லுகிற. ‡ உரம் — வன்மை.

நீர்தரத் தருதவந் தானமா தியவறநன்
னெறிகளிடை நின்மினங்தோ
நெறியைப் படைத்தா னெறிஞ்சிற் படைத்தானந்
நேர்மைகளை நீங்களெண்ணித்

தேர்தரற் கானநூல் செப்பவரு வேனெனுஞ்
செய்கைபோ லற்புதமிகுஞ்
செய்யுளடி யுந்திப் பெயர்த்தஞ்ச லென்றிசை
செழுங்கருணை யூற்றெடுத்துச்

சீர்தரப் பேருரி லார்தலைப் போலுனது
சிறுதே ருருட்டியருளே
திருஞான மீந்தவனி யுருவான சாந்தமுனி
சிறுதே ருருட்டியருளே. (௩)

முந்தைவினை திரளுமுடன் மித்தையாந் தேரென்று
மூதறிஞ ரோதலுணரா
முழுமூட மாரசத் துணர்விலே நின்றுமத
மோகபோ கத்திகைப்பார்

விந்தையாந் தேருர்ந்து வந்துநொந் தேனிதனின்
விரவுசுகம் வெங்கானலின்
மேவுபேய்த் தேராக மேனின்ற பருவசுகம்
வேண்டிமிக் கிண்டிருந்தேன்

கந்தையா ருடலங் கழித்திடத் தென்றிசைக்
காவலனு ளாவவில்விடுங்
கனத்தேர் வராதென் வினைத்தேர்வு காணுங்
கவின்விடைத் தேர்ச்சிறப்பிற்

சிந்தைமீ தென்றுமக லாதுறப் பேரையிற்
சிறுதே ருருட்டியருளே
திருஞான மீந்தவனி யுருவான சாந்தமுனி
சிறுதே ருருட்டியருளே. (௪)

காரூர் பொழிற்குலவு கருநாட நாட்டிசைக்
காவலவ னாகிநின்றுன்
கஞ்சத் திருச்சரண நெஞ்சத் தமைத்துற்ற
கண்ணருளின் மூழ்கினேன்பா
லோரூரில் யாமிருவ ருந்தோய்கை தருவொன்றி
லிருகளிறு கட்டல்போலு
முன்கடைக் கண்வழியி னன்கடை தரும்பருவ
முற்றவர்கள் பற்பலரதாற்
சீரூரு முனதுளத் தாரூர் புகுந்தனைவ
சித்தியென் றிடலுமாரூர்
சேர்தியா கற்பணிந் தேத்துபு நிறுத்திமேற்
செல்லெனச் சொல்லலுற்ற
தேரூர் தரப்பெரிது பேரூ ரிடத்துனது
சிறுதே ருருட்டியருளே
திருஞான மீந்தவனி யுருவான சாந்தமுனி
சிறுதே ருருட்டியருளே. (௫)

வேறு.

சோதிமணிவண் ணனுங்கமலத் தோய்நான் முகனுமன்பதனூற்
றணைக்கோமுனிபட் டிமுனியெனுந் தோற்றமமைந்து காலவனோ
டாதியினிற்பன் னாட்டவமிக் காற்றிடனச் சேவைசெய்திட்
டணிமிக்கமைபங் குனித்திருநா ளதனிற்பிரமோற் சவமியற்றி

வீதியினிற்றே ரீர்த்துவந்து விண்ணோருவகைக் கடன்மூழ்கும்
மிக்கமகிமை மலிதலத்தெம் விழிகண்டுவக்க விரியருளாற்
நீதிலருண்மா தவக்கனிநின் சிறுதேருருட்டி யருள்வாயே
திருவார்சாந்த லிங்கவள்ளால் சிறுதேருருட்டி யருள்வாயே. (௬)

இறப்புப்பிறப்பில் பனைபுளிக ளிங்நாளினும்பின் னாளினுந்தா
மிருக்குமிருக்கின் முடித்தலமா மிதன்சீருன்போல் பவான்றி
மறப்புநினைப்பும் பெற்றுமன மாயைவழிபோ யுழன்றிடுந்துன்
மதியோருணர்வ தன்றன்றான் மாட்சித்தவத்தோ ருய்த்துணருந்
திறப்புத்துறப்பு நூலருண்மெய்ச் செல்வாவதனுட் பொருளைநன்கு
தேரச்சித்தத் திடைசெலுத்துஞ் செயல்போற்பிறவா நெறிப்பெ
[யர்சால்
சிறப்புமேலைச் சிதம்பரத்திற் சிறுதேருருட்டி யருள்வாயே
திருவார்சாந்த லிங்கவள்ளால் சிறுதேருருட்டி யருள்வாயே (௭)

தாத்தாதாந்த தந்ததனா தனனா தனத்த தனதானா.

வாக்காலோர்ந்து நின்புகழே மறவாதிசைக்கு மடியார்சீர்
வாய்ப்பேபோன்று மண்டலமேன் மறையாதவிர்ச்சி பெறுமாறே
யாக்காநேர்ந்த வுன்சிறுதா ளமைதாரையைக்கொள் புவிமீதே
யார்ப்பாயோங்கு நுண்டுகண்மே லணிவார்தவத்தி னளவேதோ
வூக்காவீண்டு துன்பமெலா மொழிவாமுளத்தி னிடைதானே
யூற்றாமாண்கொ ளின்புறம்வா னுடலார்சிறப்பு மெளிதாமே
தேக்காகாஞ்சி யுந்தியனே சிறுதேருருட்டி யருள்வாயே
தீர்த்தாசாந்த லிங்கசுகா சிறுதேருருட்டி யருள்வாயே. (௮)

தனதானதந்த தனதாந்ததந்த தனனாதனத்த தனனா.
வனமார்விலங்கு தனைநேர்ந்துதங்கண் மனமீதிரக்க மடையார்
வளர்கால்கரங்கொ ளுடலோம்பியென்று மடமாதர்மக்க ளுடனே
தனநேடிநன்றெய் தறமோர்ந்திரந்த சனராவல்சற்று மளியார்
தருபேயிலங்க ளுறின்மாண்புமிஞ்சு சனிதானிகத்தி லடையா

வினமேனிகொண்ட விவர்கூண்டசங்க மிசையாதிருக்க மனமே
விடையீடிலின்ப மிகவோங்கவுன்ற னிருதாளமைக்கும் விதமே
தினம்யாவினும்பல் கறமேந்தநன்கு சிறுதேருருட்டி யருளே
திகழ்ஞானவின்ப நிறைசாந்தலிங்க சிறுதேருருட்டி யருளே. (௯)

தனதாந்ததந்ததன தானதத்த — தனதான

வசைதாங்குடம்புகொடு மாநிலத்தின்
மிசைதோய்ந்தபண்பையக நாடலற்று
மனவாஞ்சைகொண்டபடி யேசரித்து மடமானார்

மதிபோன்றிடுந்திலக வானனத்தை
யயிலாந்தரம்பொலிவி லோசனத்தை
யவிர்கோங்கரும்பைவிழை வாரவைக்க ணடையாதே

நசையோங்குதொண்டர்குழு வூடுநித்தம்
வதிமாண்பினின்பவநு பூதிபெற்று
நனிசாந்திகொண்டுபுவி யோர்வழுத்து குருவாய்நீள்

நவையேன்றவம்பரையும் வாயடக்கி
யிருணீங்குநன்கமைசொ ரூபசித்தி
நலமீந்திடும்படித யாவளத்தொ டெதிரேநீ

இசையார்ந்தவின்பகவி பாடுமொப்பி
லருளேன்றசுந்தரரெய் தேல்வைபச்சை
யிமவேந்தனின்பசுதை யோடுபட்டி யிறையானார்

எழில்வாய்ந்தநன்செயிடை யாடலிட்ட
புகழ்தேங்குகொங்குவள நாடிடத்தி
லிணைதீர்ந்தமங்களவை போகமுற்று முகநேர்சார்

திசையாண்டும்பர்களு நாளுநத்து
மியல்பார்ந்த விந்தைமலி பேரையிற்கொள்
செயகாஞ்சியுந்தியதன் மாடுதெற்கி லுளதாமோர்
திருவோங்குமின்பநிறை கோயிலிற்பல்
கினர்வேண்டனன்குதவு மார்வமிக்க
சிவசாந்தலிங்கசிறு தேருருட்டி யருள்வாயே. (க0)

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

ஆ கவி க00.

திருச்சிற்றம்பலம்.

நூல் முற்றுப்பெற்றது.

---

நூற்பயன்.

தானத்தாந்த தந்ததான தய்யத்தனனா.

வீணைப்போம்பொய் கொண்டமாய வெள்ளத்திடையே
மீளாப்போங்கி லுந்துமாசை வெல்லத்தருமே
சேணட்டோங்கு மும்பர்மேவு செல்வச்சுகமே
தேடாப்பாங்கி னின்றநாடு தெய்வப்பதமே
பூணத்தாங்கு மின்பவாழ்வு புல்லச்செயுமே
பூமேற்றேங்கு கொங்கினூடு பொய்யற்றுபவே
பேணர்ப்பேய்ந்த தொண்டர்மீது பெய்மெய்த்தயைசால்
பேரூர்ச்சாந்த லிங்கசாமி பிள்ளைத்தமிழே.

## வாழி விருத்தம்.

திருப்பேரு ரானபிற வாநெறிநன் மேலைச்
சிதம்பரமெய்த் தலம்வாழி சிறந்தபச்சை யம்மை
யுருப்பேரா தமைந்தபட்டீச் சுரன்முதலோர் வாழி
யுண்மையன்பர் புலவர்கள்வா னுலவுமுகில் வாழி
குருப்பேரா னந்தவருட் சாந்தலிங்கே சன்ருள்
கும்பிடுமெய்த் தொண்டர்நலங் கொண்டுமிக வாழி
மருப்பேரா மறைமுதனூல் வாழியவை யுரைசெய்
மகிமைநிறை நலங்கண்முற்றும் வாழியவா ழியவே.

**குருபாதமே கதி.**



# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கஉ | அ | குறிப்பு | தத்தனா | தாத்தன |
| கரு | ரு | எ | பெனன் | பென்ன |
| கக | கo | குறிப்பு | தாந்ததந்தன | தாந்ததந்னன |
| ருஉ | எ | ச | கொனூல் | கொணூல் |
| ,, | அ | க | வேர்ந் | வோர்ந் |

குறிப்பு:— முகவுரையின் எ-ஆம் பக்கம் ச-ஆம் வரியில் செங்கமலத் துணையே என்னும் சொற்றொடரைச் செங்கமலத் திருவடித் துணையே என்று திருத்திக்கொள்க.

குருவே துணை.

# இந்நூலாசிரியர் இயற்றிய வேறு நூல்கள்.

## அச்சிட்டுள்ள பகுதிகள்.

| | | | | |
|---|---|---|---|---|
| பக்தமான்மியம் | .... | விலை | ரூ. | 5—0—0 |
| சங்கராசாரியர் வைபவம் | .... | ,, | ,, | 1—0—0 |
| வண்ணத்திரட்டு | .... | ,, | ,, | 0—8—0 |
| மருதாசலப் பிரபந்தம் | .... | ,, | ,, | 0—6—0 |
| பக்தமான்மிய சாரம் | .... | ,, | ,, | 0—6—0 |
| கௌசைப்புராணம் பிரபந்தம் | .... | ,, | ,, | 0—8—0 |
| அவிநாசிப் பிரபந்தம் | .... | ,, | ,, | 0—6—0 |
| வேற்கடவுள் மாலை சந்தம் வகுப்பு முதலியன | .... | ,, | ,, | 0—4—0 |
| இரத்தினசலப் பிரபந்தம் | .... | ,, | ,, | 0—6—0 |
| ஸ்ரீ இராமானந்த சுவாமிகள் பிள்ளைத்தமிழ் | .... | ,, | ,, | 0—6—0 |
| வெள்ளியங்கிரி சத்திநாயகர் மாலை, பதிகம்; ஷை விநாயகர் பதிகம் | | ,, | ,, | 0—8—0 |
| அன்னியூர்த் தலபுராணம், தோத்திரத்திரட்டு | .... | ,, | ,, | 0—8—0 |

## அச்சிடாத பகுதிகள்.

பேரூர்க் கோவை.
ஷை கலம்பகம்.
ஷை புராண சாரமாகிய பட்டிநாயகர் மாலை.
ஷை சிலேடை வெண்பா.
ஷை பச்சைநாயகி பிள்ளைத்தமிழ்.
ஷை பச்சைநாயகி மாலை.
ஷை சந்தப்பதிகம்.
பல தெய்வ தோத்திரப் பதிகங்கள்.
குருந்தாசலப் பிரபந்தம்.
பழனிமலைப் பிரபந்தம்.
பத்திராசலப் பிள்ளைத்தமிழ்.

